Ishq mera mazhab hai. Rasna Mera Drink Hai.



Yesterday at my school drama, I was like Amitabh Bachchan as in 'Khuda Gawah.' And everyone clapped and applauded. And when I came home you know what Mummy asked? 'So little ustaad, what do you want to drink?' You know what I said? 'Ishq mera mazhab hai, Rasna Mera Drink Hai.' And then I drank up the whole jug of pyaara Rasna...









I Love You Rasna

More Taste — More Fun

Mudra: EAMR: 6641

உண்மை உழைப்பு நேர்மை உயர்வு தரும்

**விரைவில் உங்களை மகிழ்விக்க வருகிறார்!**

B.நாகிரெட்டி
நல்லாசியுடன

ரஜினிகாந்த்

# உழைப்பாளி



சந்தமாமா விஜயா
கம்பைன்ஸ்
தயாரிப்பு

P.வாசு
இளையராஜா
B.வெங்கட்ராம ரெட்டி




Aao Bachhon,

Naachen Gayen

Pyare, Pyare.

Rang Lagayen




**Abhi Scheme Chalu Hai... Free!**

Luxor Sketch Pen with 3 pieces of ILU vests





Lyril®

2000 SERIES

Mudra:LI:205:93

# மங்கை

மே 1993

☆ ஸ்ரீபரமாச்சார்யாள் அருளிய கட்டுரை

☆ அமெரிக்காவில்
ஒரு தாய் பிறக்கிறாள்

☆ சமையற் கலை

☆ அபார்ஷன்

☆ செயற்கை வைரம்

☆ 4 சிறுகதைகள்

☆ 4 கட்டுரைகள்

மற்றும் வழக்கமான பகுதிகள் அனைத்தும்

விலை ரூ. 6/.



# அம்புலிமாமா

மே 1993



## பொருளடக்கம்





தனிப்பிரதி ரூ. 4-00.

வருட சந்தா ரூ. 48-00.




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி'   நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## தேவை பொதுநலக்கல்வி

பிரான்ஸ் நாட்டுக் குழந்தைகள் சிலமாதங்களுக்கு முன் பள்ளிக்குச் செல்லும் போது புத்தகங்களோடு கூட கொஞ்சம் அரிசியையும் ஒருநாள் எடுத்துச் சென்றார்கள். அப்படி ஒருநாள் சேகரிக்கப்பட்ட அரிசி 4300 டன்கள். இந்த அரிசியும் ரொக்க நன்கொடையும் பட்டினியால் வாடும் சோமாலிய நாட்டுக் குழந்தைகளுக்காக அவர்கள் அளித்தது.

சோமாலியாவில் கொரில்லாப் போராக பதிநான்கு பிரிவினர் உள்நாட்டுப் போரை ஒருவருடத்திற்கு முன் துவக்கி நாட்டைச் சீர்குலைத்து விட்டார்கள். இதில் ஆயிரக்கணக்கான மக்கள் மாண்டதோடு பலர் தம் வீடு வாசல்களை இழந்து வேறுநாட்டிற்கு ஓடினர். அங்கே இருந்தவர்களுக்கு கிடைத்தது பஞ்சமும் பட்டினியும்தான்.



இந்தப்பட்டினிச்சாவைத் தடுக்க உலகின் பல நாடுகள் முன்வந்தன. ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் போராடும் குழுக்களிடையே அமைதிக்கான பேச்சு வார்த்தைகளைத் துவக்கியது. ஐ. நா. குழந்தைகள் நிதி சோமாலியக் குழந்தைகளுக்காக 10,000 டன் அரிசி சேகரிக்கத் தொடங்கிறது.

பிரான்ஸ் தேசக் குழந்தைகள் இதற்கு தாராளமாக உதவின. அந்நாட்டு மனிதவளமேம்பாட்டு அமைச்சர் பெர்னார்ட் கூச்னர் "இது குழந்தைகள் பொதுநலக்கல்வி பெற்றதின் நல்விளைவு" என்று பாராட்டினார். இக்கல்வி குழந்தைகளை தக்க சமயத்தில் தக்க விதத்தில் செயல்படச் செய்து பேசிக் கூட்டாகப் பொறுப்புணர்ச்சியையும் ஊட்டுகிறது" என அவர் மேலும் கூறினார்.



பிரான்ஸ்தேசக் குழந்தைகளைப் போலவே நம்நாட்டுக் குழந்தைகளும் செயல்பட பலவாய்ப்புகள் வருகின்றன.

இதுபற்றிக் குழந்தைகள் இக்கோடை விடுமுறையில் யோசித்து தம்மிலும் நலிந்த நிலையிலுள்ளவர்களுக்கு எவ்வாறு உதவலாம் எனச் சிந்தித்துச் செயல்படவும் வேண்டும்.

மதிமுகம்: 92   மே 1993   புன்னகை: 5

தனிப்பிரதி: ரூ. 4-00   வருட சந்தா: ரூ. 48-00



# பொம்மை

திரையுலகின் நட்சத்திரப் பத்திரிகை

மாதம் ஒருமுறை மலரும்
சிறப்புமிக்க வண்ண இதழ்

நட்சத்திர பேட்டிகள்,
சிறந்த சினிமா செய்திகள்,
வண்ணப் படங்கள்,
ரசிகர்களின்
விருப்பம் போல
என்றும் புதுமையுடன்
மலரும்

பொம்மை

தனிச் சிறப்புடன் விளங்குகிறது.

பெரிய அளவில்,
புதிய பகுதிகளுடன்,
ஒவ்வொரு மாதமும்
வெளிவருகிறது

விலை ரூ. 6/-
வருட சந்தா: ரூ. 72-00

இது ஒரு டால்டன் வெளியீடு

# கானடாவில் மோதல்கள்



ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரர்களும் உலகின் வேறு எந்த நாட்டில் வசித்தாலும் நண்பர்களாக இருக்கலாம். ஆனால் கானடா நாட்டில் மட்டும் அவ்வாறு இல்லை. கடந்த இருநூறு ஆண்டுகளாக அங்கு அவர்களிடையே மோதல்கள் ஏற்பட்டுக் கொண்டே இருக்கின்றன. கானடா பற்றி பிரிட்டிஷ் பிரெஞ்சு அரசாங்கங்களிடையே எழுந்துள்ள வாதவிவாதங்களை முடிவுக்குக் கொண்டு வரவும் கானடாவின் ஒருமைப் பாட்டைக் காக்கவும் அண்மையில் பொதுமக்கள் வாக்கு கணிப்பு நடைபெற்றது. 1992 ஆகஸ்ட் 28ந்தேதி வெளியிடப்பட்ட சீர்திருத்தங்களை ஏற்கிறீர்களா என்ற கேள்வி கேட்கப்பட்டது. கானடாவின் மொத்த பத்து மாநிலங்களில் ஏழு மாநிலங்கள் ஏற்க முடியாது என்றும் மூன்று மாநிலங்கள் ஏற்பதாகவும் வாக்களித்தன.

இன்றைய கானடா நாட்டை 1497 ல் ஜான்காபோட் என்ற ஆங்கில மாலுமி கண்டு பிடித்தார். அவர் அப்போது நியூபவுண்ட்லாண்ட் நாவஸ்கோஷியா என்ற பகுதிகளை அடைந்தார். அன்று முதல் ஆங்கிலேயர் அதனை ஆண்டு வருகிறார்கள். அதற்கு ஐம்பது ஆண்டுகளுக்குப்பின் பிரெஞ்சு மாலுமியான ஜாக்ஸ் கார்ட்டியர் இந்நாளின் க்யூபெக்கிற்குத் தெற்கே ஒரு கிராமத்தை அடைந்தார். அங்குள்ள செவ்விந்தியர்கள் அப்பகுதியைக் கானடா என்று கூறுவதைக் கேட்டார். இது ஹயூரான் பகுதியில் பேசப்படும் மொழி வார்த்தை. பிரெஞ்சு அரசாங்கம் இதற்கு புதிய பிரான்ஸ் என்று பெயரிட்டு தன் வசப்பட்ட நாடாக அறிவித்தது.

இங்கிலாந்திற்கும் பிரான்ஸிற்குமிடையே 17 வது நூற்றாண்டில் நேரடி மோதல்கள் ஏற்பட்டு 1713 ல் ஏற்பட்ட ட்ரெக்ட் ஒப்பந்தப்படி இங்கிலாந்து சில பகுதிகளைத் தன் வசம் வைத்துக் கொண்டது. மீண்டும் சில ஆண்டுகளுக்குப் பின் நடந்த 'ஏழாண்டுப் போருக்கு'ப் பின் 1769 ல் ஏற்பட்ட பாரிஸ் உடன்படிக்கையின்படி கானடா ஆங்கிலேயர் வசமாயிற்று. மேலும் நூறாண்டுகளுக்குப் பின் க்யூபெக் ஒண்டாரியோ நோவாஸ்கோஷியா நியூபர்ன்ஸ்விக் மாநிலங்கள் சேர்ந்து ஒன்றுகிப் பின் அதோடு மாடோபா, பிரிட்டிஷ் கொலம்பியா அஸ்லெரா, சஸ்கட்சுவான் ஆகிய மாநிலங்களும் சேர்ந்தன.

வெஸ்ட்மினிஸ்டர் பிரகடனப்படி கானடா பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடாகி அதன் ஆட்சிக்குப்பட்ட சுயேச்சை ஆட்சி பெற்றதாக ஆயிற்று. ஆனால் க்யூபெக் போன்ற பகுதிகளில் பெரும்பான்மையோர் பிரெஞ்சுக்காரர்களாக இருந்ததால் அவர்கள் தம்மொழியையும் பண்பாட்டையும் பாதுகாத்துக் கொள்ள இயக்கங்கள் நடத்தினார்கள். இதனால் நாடு பிரிக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கை பலமாக எழுந்தது.

பிரதமர் பிரயான்மர்லோனி பத்து மாநிலங்களின் அமைச்சர்களோடு கலந்துபேசி அரசியல் சட்டத்தில் சில திருத்தங்களைக் கொண்டுவர முயன்றார். க்யூபெக்கிற்குத் தனி அமைப்பு, செனட்டைக் கூட்டுவதற்கு பதில் தேர்தல் நடத்துதல், உள்நாட்டு வாசிகளான செவ்விந்தியர்கள், எஸ்கிமோக்கள் ஆகியோருக்குத் தன்னாட்சி முதலியன அத்திருத்தங்களின் முக்கிய அம்சங்கள், இதுபற்றி 1992 ஆகஸ்ட் 29ல் அவர்கள் ஒரு ஒப்பந்தத்திற்கு வந்தார்கள்.




இதுபற்றி அண்மையில் நடந்த பொதுஜனக் கணிப்பில் ஒரே ஒரு கேள்வி கேட்கப் பட்டது. அது 'இதனை நீங்கள் ஏற்கிறீர்களா' என்பதே.கியுபெக் அதை ஏற்கவில்லை. ஏனெனில் அதன்படி அது சுதந்திரமாக இயங்க இயலாது. கானடாவில் மிக அதிக மக்கள் வாழும் ஒண்டாரியோ மாநிலமும் இதனை நிராகரித்துவிட்டது. நொவஸ்கோஷியா, மாவிடோபா, சஸ்கட்சுவான் ஆல்பெர்ட்டா, பிரிட்டிஷ் கொலம்பியா ஆகியவையும் ஏற்கவில்லை. நியுபௌண்ட் லாண்ட், நியுபர்ன்ஸ்ஸிக், பிரின்ஸ்எட்வர்ட் தீவு ஆகிய மூன்று மாநிலங்களே இதனை ஏற்றன. ஆனால் பெடரல் பார்லிமெண்டில் எல்லா மாநிலங்களும் ஏற்றாலே திருத்தங்களைக் கொண்டு வரமுடியும்.

இந்தப் பொதுமக்கள் வாக்குக்கணிப்பினாலும் இன்னும் பலவிஷயங்களிலும் மக்களின் நம்பிக்கையை இழந்த பிரதமர் மர்லோனி தம்பதவியை ராஜினாமா செய்திருக்கிறார்.



# மாறி விட்டான்!

திருப்பூரிலுள்ள திருமலை மகா சோம்பேறி. அவன் சிறுவயதில் தன் தாயை இழந்துவிட்டதால் அவனது தந்தை மிகவும் செல்லம் கொடுத்து வளர்த்து விட்டார். அதனால் ஒரு வேலையும் செய்யாமல் அவன் தன் தந்தையின் உழைப்பில் சுகமாகச் சாப்பிட்டு ஊர் சுற்றி வந்தான்.

சோம்பேறி திருமலை வளர்ந்து பெரியவனாகிவிட்ட போதிலும் அவனுக்குப் பெண் கொடுக்க அவ்வூரில் யாரும் முன் வரவில்லை. அவன் தந்தை பல ஊர்களில் திரிந்து முடிவில் நாகம்மா என்ற பெண்ணைத் தேர்ந்தெடுத்து திருமலைக்கு மணமுடித்து வைத்தார்.

அவள் புதுக்குடித்தனம் செய்ய வந்த சில நாட்களுக்குப்பின் தன் கணவனிடம் "நீங்கள் இப்படி ஒரு வேலையும் செய்யாமல் இருக்கிறீர்களே. உங்கள் தந்தைதான் வீட்டு வேலைகளையும் வயல் வேலைகளையும் செய்கிறார். அவருக்கு உதவியாக இருக்கக் கூடாதா?" என்று கேட்டாள்.

திருமலையோ "நன்றாய் இருக்கிறதே நீ சொல்வது? நான் சுகமாக இருப்பது உன் கண்ணை உறுத்துகிறதா?" என்று கூறினான்.

இப்படியே ஒரு வருட காலம் கழிந்தது திருமலையின் தந்தை இறந்து விட்டார். நாகம்மாவிற்கு ஒரு ஆண் குழந்தையும் பிறந்து விட்டது ஆனால் திருமலை மட்டும் மாறாமல் எப்போதும் போல இருந்தான். அவன் ஒரு வேலையும் செய்யாததால் நாகம்மாதான் வீட்டு வேலைகளோடு வயல் வேலைகளையும் கவனிக்க வேண்டியதாயிற்று. அவள் வயலுக்குப் போகும் போது தன் சிறு குழந்தையையும்

—கே. வெங்கடாசலம்—

தன்னோடு எடுத்துக் கொண்டே சென்றாள்.

ஒருநாள் வெயில் அதிகமாக இருந்ததால் அவள் வீட்டைவிட்டு வயலுக்குக் கிளம்பும் போது குழந்தையைப் பார்த்துக் கொள்ளும் படிக் கூறி அவனிடம் விட்டுப் போனாள். அவள் மாலை வீடு திரும்பியபோது திருமலை ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருப்பதையும் தன் குழந்தை கொல்லைப் புறத்திலுள்ள பாழடைந்த கிணற்றின் பக்கம் இருப்பதையும் கண்டாள். அவள் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடி அக்குழந்தையைத் தூக்கிக் கொண்டாள். அவள் சற்று தாமதித்திருந்தால் குழந்தை கிணற்றினுள் விழுந்தே இருக்கும்.

அவள் திருமலையிடம் "குழந்தையைக் கூட பார்த்துக் கொள்ள முடியவில்லையா? எழுந்து போய் அவனை எடுத்து வந்திருக்கக் கூடாதா? நல்ல வேளை! நான் வந்ததால் அவன் கிணற்றில் விழுவதிலிருந்து தப்பினான்" என்று கடிந்து கொண்டாள்.

திருமலையோ "எனக்கு எழுந்திருக்க மனம் இல்லை. அதனால் அது போகிறபடி போகட்டும் என்று விட்டு விட்டேன்" என்றான். அதைக் கேட்ட நாகம்மா கோபம் கொண்டு "இப்படிப் பொறுப்பே இல்லாமல் இருக்கும் உங்களோடு நான் இனியும் குடித்தனம் செய்ய முடியாது" என்று கூறித் தன் குழந்தையுடன் தன் பிறந்த வீட்டிற்குக்



கிளம்பிப் போய் விட்டாள்.

திருமலையோ நாற்காலியில் உட்கார்ந்தே இருந்தான். ஒரு ஓர மாக சாய்த்து வைக்கப்பட்டிருந்த கட்டிலை எடுத்துப் போட்டுப் படுத்துக் கொள்ளக்கூடச் சோம்ப லாக இருந்தது. எனவே நாற்காலி யில் உட்கார்ந்தபடியே தூங்கி வழிந்த அவன் திடீரெனக் கண் விழித்துப் பார்த்தபோது தன் எதிரே ஒரு பிசாசு உட்கார்ந்திருப் பதைக் கண்டான்.

திருமலை சற்றும் பயப்படா மல் ''நீ அந்தக் கட்டிலை எடுத்துப் போடுகிறாயா? நான் படுத்துக் கொள்ள வேண்டும்'' என்றான். பிசாசும் ''நானும் சோம்பேறிப் பிசாசுதான். உன்னைப் பார்த்த துமே நீ ஒரு மகா சோம்பேறி என்று புரிந்து கொண்டு விட்டேன். இனம் இனத்தோடுதானே சேரும். உனக்கு உதவ வந்திருக்கிறேன்'' என்றது.

திருமலையும் எழுந்து அதனு டன் சென்றான்.

போகும் வழியில் பிசாசு ''என் கதையை கூறுகிறேன் கேள்'' என்று தன்னைப் பற்றிச் சொல்லத் தொடங்கியது. ''நான் உயிரோடு உடலில் இருந்தபோது என்பெயர் சுப்பண்ணன். நான்தான் வீட் டின் மூத்த மகன். கொஞ்சமும் பொறுப்பே இல்லாமல் சாப்பிட்டு விட்டு ஊர் திரிந்து கொண்டிருந் தேன். எனக்கு மூன்று நண்பர் கள். ஒருவன் மகாபாவி. அவன்





செய்யாத பாவ வேலை என்று எதுவும் இல்லை. இரண்டாதவனிடம் கெட்ட குணங்கள் நிறைய இருந்தன. மூன்றாதவனிடம் குடி, சூதாட்டம் போன்ற கெட்ட பழக்கங்களே அதிகம். நல்லவேளையாக இந்த கெட்ட குணங்களும் பழக்கங்களும் என்னைப் பற்றிக் கொள்ளவில்லை.

எனக்கு ஒரே ஒரு தங்கை. அவள் விவாக வயதை அடையவே என் தந்தை அதற்கான முயற்சிகளைச் செய்தார். திருமணம் நிச்சயமாயிற்று. அதற்கான செலவிற்கு என் தந்தை அடுத்த ஊர் வியாபாரியிடம் தன் நிலத்தை விற்றார். அவர் அந்தப் பணத்தோடு இருட்டு வேளையில் தன் ஊருக்குத் திரும்பலானார். அப்போது நான்கு பேர்வழிகள் தன்னைச் தொடர்ந்து வருவது கண்டு அவர் சட்டென ஒரு ஆலமரத்தின்கீழ் தான் கொண்டு வந்த பணத்தைப் புதைத்து வைத்து விட்டு வீட்டிற்கு வந்தார்.

அவர் வீடு வந்து படுத்த படுக்கையானார். என்னிடம் அந்தப் பணம் புதைத்து வைத்த ஆல மரம் எங்கே உள்ளது என்று கூறினார். அந்தப் பணத்தை எடுத்து வந்து என் தங்கையின் திருமணத்தை நடத்துமாறு கூறிவிட்டு அவர் இறந்து போனார்.

நான் அந்தப் பணத்தை எடுக்கப் போவது என் மூன்று நண்பர்களுக்குத் தெரிந்தது. நான் இரவில் கிளம்பியபோது அவர்கள் என்னைப் பின்தொடர்ந்தார்கள். இதை அறிந்த நான் குறிப்பிட்ட ஆலமரத்திற்குச் செல்லாமல் வேறு இடத்திற்குப் போய் குழி தோண்டலானேன். அப்போது அவர்கள் என்மீது ஒரு பாறாங்கல்லை எறிந்து என்னை கொன்று விட்டார்கள். ஆனால் அவர்களை காட்டுப் புலிகள் வந்து அப்போதே கொன்று விட்டன.

பிசாசு இக்கதையைக் கூறி "நான் இறந்ததால் என் தங்கையின் திருமணம் நடக்கவில்லை. இந்தக் கவலையில் என் தங்கையும் தாயும் சில நாட்களில் இறந்து

போனார்கள். நான் பிசாசாக இன்னமும் திரிந்து கொண்டிருக் கிறேன்'' என்றது. அப்போது அவர் கள் குறிப்பிட்ட ஆலமரத்தையே அடைந்து விட்டார்கள்.

பிசாசு திருமலையிடம் ''இன்று மாலை உன் மனைவி தன் குழந் தையுடன் தன் பிறந்த ஊருக்குச் சென்று கொண்டிருப்பதைப் பார்த் தேன். நீ இந்தப் பணத்தை எடுத் துக் கொண்டு போய் ஏதாவது தொழிலை ஆரம்பி. உன் மனைவி யையும் குழந்தையையும் அழைத்து வந்து நல்லவிதமாய்க் குடித்தனம் நடத்து. சோம்பேறியாகத் திரிவது எவ்வளவு அபத்தமானது என் பதை நீ என் கதையைக் கேட்டு உணர்ந்திருப்பாய்'' என்றது.

திருமலை கடப்பாரையை வாங்கி அங்கே மண்ணைப் பறித்து புதைத்து வைக்கப்பட்டிருந்த பணத்தை வெளியே எடுத்தான். ஆனால் அவை பழங்கால நாண யங்கள். இப்போது செல்லாதன வாக ஆகிவிட்டன. அதனால் அங்கேயே புதைத்து விட்டு வீடு திரும்பினான்.

ஒரு வாரத்திற்குப் பின் திரு மலை தன் மனைவிக்குக் கடிதம் எழுதினான். அதை அவள் படித்து மகிழ்ந்து போனாள். அதில் ''என் தவறை நான் புரிந்து கொண் டேன். நானே வந்து உன்னை இங்கு அழைத்து வர நேரமில்லை. வயல் வேலை அதிகமாக உள்ளது. அதனால் நீ குழந்தையோடு கிளம்பி வந்துவிடு'' என்று எழுதப்பட்டி ருந்தது.

அதைப் படித்த அவள் தன் கணவன் முற்றிலும் மாறி வேலை யில் ஈடுபட்டு விட்டான் எனத் தெரிந்து கொண்டாள். அவள் தன் குழந்தையுடன் திருப்பூருக்குத் திரும்பிச் சென்றாள்.



# யாரைத்தான் நம்புவதோ!

ஒரு ஊரில் ஒரு கோவிலின் முன் ஒரு பிச்சைக்காரன் உட்கார்ந்திருந்தான். அவன் பக்கத்தில் ஒரு மரப்பலகையில் "நான் குருடன் காசு போடுங்கள்" என்று எழுதப்பட்டு வைக்கப்பட்டிருந்தது.

அதைக் கண்டு இரக்கப்பட்ட ஒரு கனவான் ஒரு அரை ரூபாய் நாணயத்தை அப்பிச்சைக்காரனின் முன் விரிக்கப்பட்டிருந்த துணி மீது போட்டார். அந்த நாணயம் உருண்டு ஓடிச் சற்று தூரத்தில் போய் விழுந்தது. உடனே பிச்சைக்காரன் எழுந்து ஓடிப்போய் அந்த நாணயத்தை எடுத்து வந்தான்.

அப்போது கனவான் "அடடே! உனக்குக் கண் நன்றாக தெரிகிறதே. நீ குருடன் இல்லையா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டார். அவனும் "இல்லை நான் ஊமை என்று பலகையில் எழுதச் சொல்லி எழுதியவனிடம் பணம் கொடுத்தேன். அவன் பலகையில் குருடன் என்று எழுதி என்னை ஏமாற்றி விட்டான் பாருங்கள். இந்தக் காலத்தில் யாரைத்தான் நம்புவதோ!" என்றான்.

கணவானும் சலித்துக்கொண்டே "ஆமாம் ரொம்ப சரியாகச் சொன்னாய்!" என்று கூறி ஒரு ஏளனச் சிரிப்புடன் சென்றுவிட்டார்.






**ந**ம் பாரத நாட்டின் வடகிழக்குப் பகுதியில் மாணிக்கபுரி என்ற நாடு இருந்தது. அங்கு வசந்தோற்சவம் ஒவ்வொரு ஆண்டிலும் ஒரு மாத காலத்திற்கு நடக்கும். வசந்த காலத்தில் மலைகளினிடையே அமைந்த மாணிக்கபுரி வண்ண மலர்களாலும் மரம் செடிகொடிகளின் புதிய தளிர்களாலும் புதிய அழகைப் பெற்றுவிடும். இந்த இயற்கை அழகை ரசிக்கத்தான் தொன்று தொட்டு அந்நாட்டு மக்கள் வசந்தோற்சவம் கொண்டாடி வந்தார்கள்.

மாணிக்கபுரி மன்னன் பிரதாபவர்மன் நீதிக்கும் நேர்மைக்கும் நல்லாட்சிக்கும் பெயர் பெற்றவன். அவன் இளம் வயதிலேயே அந்நாட்டின் மன்னனாகி விட்டான். அவனது தந்தை புஷ்யவர்மன் தனக்கு வயது அதிகமாகி விட்டதால் மகன் பிரதாபனை மன்னனாக்கினான்.

பிரதாபவர்மன் மன்னனான சில ஆண்டுகளுக்குள்ளேயே மக்களின் அன்பையும் ஆதரவையும் தன் நல்லாட்சியால் பெற்றுவிட்டான். தன் நாட்டில் அமைதியை நிலைநாட்டி மக்களைக் காத்ததோடு அவன் அண்டை நாடுகளுடனும் சுமுகமான உறவு கொண்டிருந்தான். அதனால் போர் என்ற பயம் இல்லாமல் சுகவாழ்வு வாழ்ந்து வந்தனர்.



நாட்டில் அமைதி நிலவியதால் மக்கள் மனம் மகிழ பலவிழாக் களைக் கொண்டாடினார்கள். குறிப்பாக வசந்தோற்சவம் யாவ ராலும் கோலாகலமாகக் கொண் டாடப்பட்டு வந்தது.

பிரதாபவர்மன் பட்டத்துக்கு வந்து இருபத்தைந்து ஆண்டுகள் முடிவுற்றன. அந்த வெள்ளிவிழா வையும் வந்தோற்சவத்தையும் இணைத்து விமரிசையாகக் கொண் டாட ஏற்பாடுகள் செய்யப்பட் டன. விளையாட்டு, இசை, இலக் கியம் நடனம் ஆகிய துறைகளில் போட்டிகள் வைக்கப்பட்டன. கவி யரங்கம், பட்டிமன்றம் போன்றவை களும் நடைபெற்றன. இவற்றில் கலந்து கொள்ளப் பல்வேறு நாடு களிலிருந்து பலர் வந்தனர்.

பல விளையாட்டுப் போட்டி களில் முதலிடம் பெற்ற ஒரு மலைச்சாதி இளைஞன் மற்போர், சிலம்பம் ஆகியவற்றில் வெற்றி பெற்று எல்லோரது கவனத்தை யும் கவர்ந்தான். அந்த ஆண்டு புதி தாக ஒரு விளையாட்டுப் போட்டி வைக்கப்பட்டது. தரைமீது வைக் கப்பட்ட ஒரு தேங்காயைக் குதிரை மீது சவாரி செய்தவாறே வந்து ஒரு மூங்கில் கழியால் அதனைப் பந்து போல அடித்து தூரவிழச் செய்ய வேண்டும். இந்தப் போட்டி யிலும் அந்த மலைச்சாதி இளை ஞனே வெற்றி பெற்றான். அதைக் கண்டு மக்கள் கைதட்டி அவனைப் பாராட்டினார்கள்.

போட்டிகள் முடிந்ததும் பரி சளிப்பு விழா நடைபெற்றது. வெற்றி பெற்றவர்களுக்கு மன் னன் பிரதாபவர்மனே பரிசுகளை அளித்தான். பல பரிசுகளைப் பெற்ற அந்த மலைச்சாதி இளை ஞனைப் பார்த்து அவன் ''உன் பெயர் என்ன?'' என்று கனிவுடன் கேட்டான்.

அவனும் ''என் பெயர் உத்த மன். இவர்கள் என்னோடு வந்த மலைச்சாதி இளைஞர்கள்'' என்று பணிவுடன் கூறினான். மேலும் அவன் ''நாங்கள் சிங்காய் என்ற மலைப்பகுதியில் வாழ்பவர்கள்.



இந்தப் போட்டிகளில் நாங்கள் கலந்து கொள்வது இதுவே முதல் தடவையாகும்'' என்றான்.

மன்னனும் ''அப்படியா! மிக்க மிகழ்ச்சி'' எனப் புன்னகை புரியவே உத்தமனும் தன் நண்பனிடம் இருந்த ஒரு மலர்ச்செண்டை வாங்கி அங்கே அருகிலிருந்த இளவரசி பிரியம்வதைக்குச் சமர்ப்பித்து ''இளவரசியாரே! இது அபூர்வ மலர்களால் ஆன செண்டு. இந்த மலர்கள் எங்கள் நாட்டில் தான் உண்டு. வேறு எங்கும் கிடையாது இவற்றை ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்றான்.

இளவரசியும் அந்த அழகிய வண்ண மலர்ச் செண்டை வாங்கிக் கொண்டு அவற்றைப் பார்த்தவாறே தன் தந்தையிடம் ''அப்பா! இவ்வளவு அழகிய மலர்களை இதற்கு முன் நான் பார்த்ததே இல்லை. இந்த மலர்ச்செடிகள் நம் அரண்மனைப் பூங்காவில் கூட இல்லை'' என்றாள்.

மன்னனும் ''ஆம் இல்லை தான்'' எனக் கூறினான். பிறகு பரிசளிப்பு விழாவின் முடிவுரையில் மன்னன் ''அன்புமிக்க மக்களே! இந்த ஆண்டு வசந்தோற்சவத்தை வெகு விமரிசையாக நீங்கள் கொண்டாடியதற்காக உங்களைப் பாராட்டுகிறேன். விளையாட்டுப் போட்டிகளில் உற்சாகத்துடன் பல இளைஞர்கள் கலந்து கொண்டார்கள். பல விளையாட்டுப் போட்டிகளில் முதலிடம் பெற்ற மலைச்சாதி இளைஞன் உத்தமனை நான் மிகவும் பாராட்டுகிறேன். நாளை வசந்தோற்சவம் முடியும் நாள். வழக்கம்போல நாளை பொது மக்கள் அரண்மனையைச் சுற்றிப் பார்க்க அனுமதிக்கப்படுவார்கள். யாரும் எங்கும் செல்லவும் அரச குடும்பத்தவருடன் தாராளமாகப் பேசவும் வாய்ப்பு அளிக்கப்படும். அம்பிகை நம் யாவரையும் காப்பாற்றட்டும்'' என்று கூறித் தன் உரையை முடித்தான்.

அதைக் கேட்ட மக்கள் ''மன்னர் பிரதாபசிம்மர் வாழ்க! இளவரசி பிரியம்வதை வாழ்க!'' என்று

கோஷமிட்டுத் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்கள். மன்னனும் இளவரசியும் தம் ரதங்களில் அமர்ந்து அரண்மனைக்குக் கிளம்பிச் சென்றார்கள்.

அரண்மனையை இளவரசி அடைந்ததும் தன் தோழிகளிடம் ஒரு காலிப் பூந்தொட்டியைக் கொண்டுவரச் சொன்னாள். அது வந்ததும் அவள் உத்தமன் கொடுத்த மலர்ச் செண்டுகளில் இருந்த மலர்களை எடுத்து காம்புடன் அதில் நட்டு வைத்தாள். அது அரண்மனைக்கு மேலும் அழகை அதிகரிப்பது போலாயிற்று.

மறுநாள் நகர மக்கள் அரண்மனையைக் காணக் கூட்டம் கூட்டமாக வந்தனர். அவர்களை எல்லாம் மன்னனும் இளவரசியும் மற்றும் அவளது உறவினர்களும் அரண்மனை மேல் மாடத்தில் நின்று கைகளை ஆட்டி வரவேற்றனர். வாலிபர்கள் வண்ணப் பொடிகளைப் பிறர்மீது தூவியும் வண்ண நீரைக் குழாய்களில் நிரப்பிப் பீச்சியும் வசந்தவிழாவை உற்சாகமாகக் கொண்டாடினார்கள்.

மாலை ஆயிற்று. மக்களின் உற்சாகம் சற்றுத் தணிந்தது. அப்போது மன்னன் சேனாதிபதியை அழைத்து "நேற்று சிங்காய் பகுதியிலிருந்து வந்த மலைச்சாதி இளைஞன் இளவரசிக்கு அளித்த மலர்களைப் பார்த்தாய் அல்லவா?




அந்த மலர்ச்செடிகளைக் கொண்டு வந்து நம் பூங்காவில் நட்டு வளர்க்க வேண்டும் என்று பிரியம்வதை ஆசைப்படுகிறாள். அதனால் நம் படையிலிருந்து இரு கெட்டிக்கார வீரர்களைத் தேர்ந்து எடுத்து அவர்களை சிங்காய் மலைப்பகுதிக்கு அனுப்பு. அவர்கள் அந்த மலர்ச் செடிகளை இங்கே கொண்டு வர வேண்டும். அந்த வீரர்களுக்குக் கண்டிப்பாக உத்தமன் உதவுவான். அவர்கள் முதலில் அவனைச் சந்தித்து விட்டுப் பிறகு செடிகளை எடுக்கச் செல்லட்டும்" என்று கூறினான்.

சேனாதிபதியும் "அப்படியே செய்கிறேன் அரசே! நம்படை



யில் இரு கெட்டிக்கார இளைஞர்களுக்கா பஞ்சம்?'' என்று கூறிவிட்டுச் சென்றான். சற்று நேரத்திற்குப் பின் இருவாலிபர்களை அவன் அழைத்து வந்து இளவரசியின் மாளிகையிலுள்ள மலர்களை அவர்களுக்குக் காட்டினான்.

அந்த மலர்களைப் பார்த்து அந்த இரு வாலிபர்களும் ''ஆஹா! எவ்வளவு அழகு!'' என மகிழ்ச்சி ததும்பக் கூறினார்கள். ''இவற்றை நன்கு நினைவில் வைத்துக் கொண்டு இந்த மலர்ச் செடிகளைக் கொண்டு வருகிறோம். இளவரசியாரே! உங்கள் மகிழ்ச்சியே எங்கள் மிகழ்ச்சி. எங்களுக்கு விடை கொடுங்கள்'' என அவர்கள் இளவரசியை வணங்கிப் பணிவுடன் கூறினார்கள். அவளும் ''விரைவிலேயே வந்து விடுங்கள்'' எனக் கூறி விடை கொடுத்து அனுப்பினாள்.

இரண்டு வாரங்கள் கழிந்தன அப்போதுதான் அந்த இரு வீரர்கள் திரும்பி வந்தார்கள். அதுவும் மலர்களோடு மட்டுமே. சேனாதிபதி கம்பீரசிம்மன் அவர்களை அழைத்துக் கொண்டு அரண்மனைக்கு வந்தான். அங்கு மன்னனும் இளவரசியும் அவர்களது வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

கம்பீரசிம்மன் அந்த வாலிபர்கள் கொண்டுவந்த மலர்களை மன்னன் முன்னும் இளவரசி முன் வைத்து ''அரசே! இவர்களுக்கு இப்போதைக்கு இந்த மலர்களே கிடைத்தன. செடிகள் கிடைக்கவில்லை'' என்று கூறினான்.

மன்னன் அவற்றைப் பார்த்தவாறே அவ்வீரர்களிடம் ''செடிகள் ஏன் கிடைக்கவில்லை?'' என்று கேட்டான். அப்போது அவர்களில் ஒருவன் ''அரசே! நாங்கள் மிகவும் சிரமப்பட்டு பயணம் செய்து சிங்காய் மலைப்பகுதியை அடைந்தோம். அங்கு முதலில் உத்தமனையும் சந்தித்தோம். அவன் எங்களை மகிழ்ச்சியுடன் வரவேற்றான். பிறகு நாங்கள் வந்த காரணத்தைக் கேட்டறிந்து அவன் எங்



களை வெகு தொலைவிலுள்ள ஒரு மலைப்பகுதிக்கு அழைத்துச் சென்றான். அங்கு மிக உயரமான செடிகள் புதர்களாக வளர்ந்திருந் தன. அவற்றில் இந்த மலர்கள் பூத்திருந்தன. இவை நூறு வருடங் களுக்கு ஒரு முறைதான் பூக்கு மாம். அப்பகுதி மக்கள்கூட இம் மலர்களை இப்போதுதான் முதன் முறையாகப் பார்த்தார்களாம். இவை பூத்த இரண்டு ஆண்டு களுக்குப் பின் சிதறிவிழுந்து சிறு சிறு செடிகளாக முளைக்கின்றன வாம். பிறகு அவை நூறு வருடங் கள் வளர்ந்த பிறகே பூக்கின்றன வாம். இந்த விவரங்களை எல் லாம் அப்பகுதியிலுள்ள முதியவர் கள் எங்களுக்குச் சொன்னார் கள். இளவரசியார் ஏமாற்றமடை யக் கூடாதே என்பதற்காக அதன் மலர்களைக் கொண்டு வந்தோம்'' என்றான்.

அந்த வீரன் சொன்னதை கவன மாய்க் கேட்ட மன்னன் ''ரொம்ப அதிசயமாக இருக்கிறதே இன்னும் இரண்டு ஆண்டுகளில் புதிய செடி கள் முளைக்கும் அல்லவா? அப் போது போய் அவற்றை எடுத்து வந்து நம் பூங்காவில் நட்டு வளர்க் கலாம்'' என்றான்.

அப்போது இளவரசி ''இதன் மலர்கள் நூறு வருடம் கழித்தா பூக்கும்? அப்படியானால் நான் அது வரை எங்கே உயிருடன் இருக்கப் போகிறேன்'' என்றாள் மன்னனும் ''சரி வீரர்கள் மிகவும் சிரமப் பட்டு இவற்றைக் கொண்டு வந்தி ருக்கிறார்கள். எனவே சேனாதி பதியே! இவர்களுக்கு தக்கபரிசு கொடுத்து அனுப்புங்கள்'' என் றான்.

சேனாதிபதியும் அவ்வாறே செய்வதாகக் கூறி அந்த இரு வீரர் களையும் அழைத்துச் சென்றான். வீரர்கள் சிங்காய் மலைக்குப்போய் நூறாண்டுகளுக்கு ஒரு முறை மல ரும் மலர்களைக் கொண்டு வந்த செய்தி மக்களிடையே பரவியது. அந்தச் செய்தி ராஜகுருவான கௌரிநாதரின் காதிலும் விழுந் தது.

அதைக் கேட்டதும் அவர் திடுக்கிட்டார். அவர் நன்கு படித்தவர். அரச குடும்பத்தின் நலனில் மிகுந்த அக்கரை கொண்டவர். உடனே அவர் தன்னிடமுள்ள ஓலைச்சுவடிகளை எடுத்துப் பிரித்துப் பார்க்கலானார். அதில் அந்த நூறாண்டுக்கு ஒருமுறை பூக்கும் மலர் பற்றிய விவரத்தைப் படித்து விட்டு அவர் உடனே மன்னனைக் காண அரண்மனைக்கு வருவதாக முன் கூட்டித் தகவல் அனுப்பிவிட்டுக் கிளம்பினார்.

திடீரென ராஜகுரு இரவுவேளை என்றுகூடப் பாராமல் தன்னைக் காண வந்து கொண்டிருக்கிறார் என்பதை மன்னன் கேட்டு ஆச்சரியமும் திகிலும் அடைந்தான். அவன் அவரது வருகையை எதிர் பார்த்து ஆவலுடன் காத்துக் கொண்டிருந்தான். ராஜகுருவும் சற்று நேரத்தில் அரண்மனைக்கு வந்து சேர்ந்தார்.

மன்னன் அவரை வணங்கி மரியாதைகளுடன் உள்ளே அழைத்துச் சென்றான். அவரைத் தக்க ஆசனத்தில் அமர்த்தி "குருதேவா! தாங்கள் திடீரென்று இங்கு விஜயம் செய்ய என்ன காரணமோ" என்று கேட்டான். ராஜகுருவும் "முக்கியமான காரணம் இருப்பதால்தான் வந்திருக்கிறேன்" என்றார்.

மன்னனும் "அதைநான் அறிந்து கொள்ளலாமா?" என்று கேட்டான். ராஜகுருவும் "நான் இப்போதுதான் நூறாண்டுக்கு ஒருமுறை மலரும் மலர் இங்கு வந்துள்ளது பற்றிக் கேள்விப்பட்டேன். இதன் செடியை வளர்ப்பது அரசகுடும்பத்திற்கும் நாட்டிற்கும் கெடுதலையே ஏற்படுத்தும் எனவே இதைத் தெரிவிக்கவே ஓடோடி வந்தேன்" என்றார்.

மன்னன் "ஆ! இந்த மலர் அழிவுக்கு காரணமா!" என்று கேட்டுக் கல்லாய்ச் சமைந்து நின்றான்.

(தொடரும்)






# மன்னன் மனைவி

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பிறகு கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கி செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! சிலர் தம் வேலையில் மும்முரமாக இறங்கி தாம் அதிசாமர்த்தியமாய் அதைச் செய்வது போல எண்ணி முடிவில் முட்டாள்தனமாய் நடந்து ஏமாந்து போகிறார்கள். இதற்கு உதாரணமாக தயாள சிம்மன் என்ற மன்னனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

முன்னொரு காலத்தில் தர்மபுரத்தை தயாள சிம்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவ

## வேதாளம் சொல்லும் கதை



னுக்கு ஒரு தங்கை இருந்தாள். அவளுக்கு விவாகமும் ஆகியது. சில ஆண்டுகளுக்குப் பின் ஒரு பெண் குழந்தையைப் பெற்றுவிட்டு அவள் இறந்து போனாள். தன் தங்கைமீது கொண்ட அன்பால் தன் அத்தானின் அனுமதியுடன் அவள் பெற்ற குழந்தையை அவன் தன் அரண்மனைக்குக் கொண்டு வந்தான். அவன் அக்குழந்தைக்கு மேகலா என்று பெயரிட்டு அவளைத் தன் மகனான ஜெயசிம்மனுடன் சேர்த்து வளர்த்து வந்தான். அவர்கள் வளர்ந்து பெரியவர்களானதும் அவர்களுக்குத் திருமணம் செய்து வைக்கவும் அவன் தீர்மானித்துக் கொண்டான்.

ஆண்டுகள் உருண்டன. மேகலாவும் ஜெயசிம்மனும் வளர்ந்து பெரியவர்களானார்கள்.

ஒருநாள் அவன் ஜெயசிம்மனிடம் தன் எண்ணத்தைக் கூறினான். ஆனால் ஜெயசிம்மனோ "மேகலாவையா? அவள் பட்டத்து ராணியாகத் தகுதியற்றவள். அவளை நான் மணக்க மாட்டேன்" என்றான். அதைக் கேட்ட தயாளசிம்மன் வெகுண்டு "ஏன்? மேகலாவுக்கு என்ன குறை? எதில் குறைந்து போனாள்? அவளைவிட உன்னை மணக்கத் தகுதிபெற்றவள் வேறு யார் இருக்கிறாள்?" என்று கேட்டான்.

அவனும் தயங்கியவாறே "ஆம் ஒருத்தி இருக்கிறாள். அவள் தான் என்னுடன் படித்த நம் சேனாதிபதியின் மகள் சோபனா. அவளே என்னை மணக்க எல்லாத் தகுதிகளும் பெற்றவள்" என்று கூறினான். அதைக் கேட்ட தயாளசிம்மன் "என்ன? சோபனாவையா? அவள் எந்த விதத்தில் மேகலாவைவிட உயர்ந்தவள்? பிறப்பிலா? அழகிலா? குணத்திலா?" என்று கோபத்தோடு கேட்டான்.

ஜெயசிம்மனும் "மன்னியுங்கள் அப்பா! நான் இப்போது என்ன சொன்னாலும் உங்கள் காதில் ஏறாது. ஏனெனில் நீங்கள் மேகலாவையே உயர்வாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அதனால்

இப்போது இது பற்றிப் பேச வேண்டாம்'' என்று கூறி விட்டுப் போனான்.

இதற்குப் பின் இரண்டு மூன்று முறைகளில் தயாள சிம்மன் ஜெய சிம்மனின் விவாகம் பற்றிப் பேசினான். அவன் மேகலாவை விரும்பாமல் சோபானாவையே மணக்க உறுதியாக இருக்கிறான் என்பது தயாளசிம்மனுக்கு நன்கு தெரிந்தது.

அவன் ஜெயசிம்மனிடம் ''நீ உன் பிடிவாதத்தை விடமாட்டாயா? உன் திருமணம் எனக்கு ஒரு பெரும் பிரச்னையாகப் போய் விட்டதே'' என்று சலித்துக் கொண்டே கூறினான்.

தன் தந்தையின் மனம் படும் பாட்டைக் கண்ட ஜெயசிம்மன் ''இந்தப் பிரச்னையைத் தீர்க்க நான் ஒரு வழி கண்டுபிடித்திருக்கிறேன். அதன்படி நடந்தால் எல்லாம் நல்லவிதமாய் முடியும்'' என்றான். அதென்னவழி என்று தயாள சிம்மன் கேட்கவே ஜெயசிம்மனும் ''நான் இப்போது உங்களுக்குச் சொல்லப்போகும் கதையை நீங்கள் மேகலாவிடமும் சோபனாவிடமும் கூறி அதில்வரும் கேள்விகளுக்கு விடைகளை அவர்களிடம் கேளுங்கள். அவர்கள் கூறும் விடைகளிலிருந்து அவர்களில் என்னை மணக்க யார் தகுந்தவள் என்பது உங்களுக்கே தெரியவரும்'' என்று



கூறி ஒரு கதையைத் தன் தந்தைக்குத் கூறினான்.

தயாள சிம்மனும் மேகலாவையும் சோபனாவையும் ஒன்றாக உட்கார வைத்து ஜெயசிம்மன் கூறிய கதையை அவர்களுக்குச் சொல்லலானான்.

வெகுகாலத்திற்கு முன் சொர்ணபுரியை சோமகேது என்பவன் ஆண்டு வந்தான். அவனுக்கு இரு மனைவிகள் இருந்தனர். அவனது மூத்த மனைவி சுவர்ணலதா. இளையவள்ஹேமலதா. சுவர்ணலதாவின் மனதில் அவளது கணவன் ஹேமலதாவையே அதிகமாக நேசிக்கிறான் என்ற எண்ணம் உறுதியாகலாயிற்று. அதற்கு ஏற்



றது போல ஹேமலதா ஆண்வேடம் பூண்டு சோமகேதுவுடன் அடிக் கடி வேட்டைக்குப் போய் வரலா னாள். அரசாங்க வேலைகளிலும் பங்கு கொண்டு வரலானாள்.

இதையெல்லாம் கண்ட சுவர்ண லதா தானும் ஆண் வேடம் பூண்டு மன்னனோடு வேட்டையாடப் போக வேண்டும் என்று தீர்மானித் துக் கொண்டாள். அதை அவள் சோமகேதுவிடம் கூறவே அவன் ஆச்சரியப்பட்டு ஏதோ சொல்ல நினைத்தான். ஆனால் சுவர்ண லதா அவனைப் பேசவிடாமல் "ஹேமலதா போலவே எனக்கும் குதிரை சவாரி செய்யத் தெரியும். அம்பு எய்யவும் முடியும்" என்றான்.

அது கேட்டு சோமகேது "சரி உன் இஷ்டம் போலவே செய்" என்று கூறினான்.

இதற்கு ஒரு வாரத்திற்குப் பின் சோமகேது வேட்டைக்குக் கிளம் பவே சுவர்ணலதாவும் ஆண் வேடத்தில் அவனோடு கிளம்பிச் சென்றாள். காட்டில் மலைச் சாதி யினர்களின் குடிசைகள் ஆங்காங்கு இருந்தன. வேட்டையின் போது வழி தவறிய சோமகேது தன் மனைவியுடன் ஒரு மலைச்சாதி யினனின் குடிசையை அடைந்தான். அப்போது அதில் ஒரு பெண் மட்டுமே இருந்தாள்.

அவள் மன்னனையும் ராணியை யும் மரியாதையுடன் வரவேற்று உள்ளே அழைத்துப் போய் உட் கார வைத்தாள். பிறகு இரு மண் பாத்திரங்களில் ஏதோ ஒரு உண வுப் பொருள் வைத்து எடுத்து வந்து "இது நாங்கள் தயாரிக்கும் விசேஷத் தின்பண்டம்" என்றாள். மன்னனும் புன்னகைபுரிந்து அதனை ஆவலுடன் சாப்பிட்டான். சுவர்ண லதா அதிலிருந்து கொஞ்சம் எடுத்து வாயில் போட்டுப் பார்த்தாள். அவளுக்கு வயிற்றைக் குமட்டி யது. ஆனால் மன்னனோ அதனை ருசித்துச் சாப்பிட்டுக் கொண் டிருந்தான்!

அவன் முழுவதையும் சாப்பிட்ட பின் மலைச்சாதிப் பெண்ணிடம் "ரொம்ப நன்றாக இருந்தது. அப்

படியே குடிக்கக் கொஞ்சம் தேன் இருந்தால் கொடுக்கிறாயா?'' என்று கேட்டான். அவளும் இரு சிறு குடுக்கைகளில் தேன் கொண்டு வந்து அவர்களிடம் கொடுத்தாள். அவர்கள் அதைக் குடித்து இளைப் பாற்றினார்கள். சற்று நேரமான தும் அவர்கள் எழுந்து அங்கிருந்து புறப்பட ஆயத்தமாகவே அந்தப் பெண் அவர்களை வழியனுப்ப வந்தாள்.

அப்போது சுவர்ணலதா அவ ளைத் தனியே அழைத்துப்போய் அவள் சற்று முன் கொடுத்த தின் பண்டத்தை எப்படித் தயாரிப்பது என்று கேட்டு விவரம் தெரிந்து கொண்டாள். அதன்பின் அவள் சோமகேதுவுடன் அரண்மனைக் குத் திரும்பி வந்தாள்.

இதற்குப் பின் ஒரு வாரம் கழிந்தது. சோமகேது ஒருநாள் சுவர்ணலதாவின் அந்தப்புரத்திற் குச் சென்றான். அப்போது அவள் ஒரு தங்கப் பாத்திரத்தில் ஏதோ ஒரு திண்பண்டத்தைக் கொண்டு வந்து ''இது தாங்கள் மிகவும் விரும்பிச் சாப்பிடும் பொருள்'' என்று கூறி அவன்முன் வைத்தாள். மன்னன் அதைப் பார்த்தான். மலைச்சாதிப் பெண் செய்த திண் பண்டம் போலவே அது இருந் தது.

மன்னன் அதனை எடுத்து ஒரு புறமாக வைத்தான். தன் கழுத் திலிருந்த முத்து மாலையைக் கழற்றி அவன் அதை சுவர்ண





லதாவுக்கு அணிவித்து "நீ என் பால் காட்டும் அன்பு சிறந்தது. உன்போன்ற மெல்லிய ரூபமும் குணமும் படைத்தவர்கள் காடு களுக்கும் போவது சரியல்ல" என்று சிரித்துக் கொண்டே கூறி னான்.

சுவர்ணலதா அதைக்கேட்டு மகிழ்வதா அல்லது வருந்துவதா என்று யோசிக்கலானாள். அவள் எவ்வித பதிலையும் கூறவில்லை.

இந்தக் கதையைச் சொல்லி முடித்து தயாளசிம்மன் மேகலாவை யும் சோபனாவையும் மாறி மாறிப் பார்த்து "எனக்கு ஒரு சந்தேகம். சோமகேது தன் இரு மனைவி களான சுவர்ணலதாவையும் ஹேம லதாவையும் ஒன்று போலப் பார்க்கவில்லை என்பது நன்கு தெரிகிறது. அவன் நடந்து கொள் ளும் விதம் சரியா தவறா" என்று கேட்டான்.

மேகலா சட்டென "சோமகேது சுவர்ணலதாவிடம் நடந்து கொண்ட விதம் சரியல்ல. இரு மனைவி யரை சமமாக பாவிக்க வேண்டிய அவன் ஹேமலதாவை மட்டும் எங் கும் அழைத்துச் செல்வது என்பது அவனது ஓரவஞ்சனையையே காட்டு கிறது" என்றாள்.

சோபனாவோ "சோமகேது வின் போக்கு சரியே. அது முதிர்ந்த அனுபவத்தையும் கூரிய அரசியல் அறிவையும் காட்டுகிறது. அரசே" என்றாள். இதைக் கேட்ட தயாள சிம்மன் மலைத்துப் போனான். சற்று நேரம் ஆழ்ந்து யோசித்து விட்டு அவன் அங்கிருந்து சென் றான். ஒரு மாதத்திற்குப் பின் அவன் ஜெயசிம்மனுக்கும் சோபனா வுக்கும் மணமுடித்து வைத்து ஆட் சிப் பொறுப்பை அவனிடம் ஒப் படைத்தான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே தயாளசிம்மன் தன் கேள்விக்கு சோபானா அளித்த விடையை ஏன் திருப்திகரமாகக் கருதினான்? அதனால்தானே அவ ளைத் தன் மகனுக்கு மணமுடித்து வைத்தான். இது புத்திசாலித் தனமா? வேண்டுமென்றே தன்

மகனுக்காக சோபனா கூறியதே சரி எனத் திருப்தி அடைந்தானா? இக்கேள்விகளுக்கு விடை தெரிந்து நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''ஒரு சாதாரண மனிதனுக்கும் நாட்டை ஆளும் மன்னனுக்கும் நிறைய வித்தியாசம் உண்டு. மன்னனுக்குத் தன் நாடு முழுவதும் குடும்பமே. மலைச் சாதிப் பெண்ணைத் திருப்திப் படுத்த சோமகேது தனக்குப் பிடிக்காத தின்பண்டத்தை மிகவும் விரும்புபவன் போல உண்டான். அதைச் சுவர்ணலதா தெரிந்து கொள்ளாமல் போனாள். ஹேமலதா அந்த இடத்தில் இருந்தால் அவனைப் பாராட்டி இருப்பாள். சுவர்ணலதா மலைச்சாதியினள் தயாரித்த தின்பண்டம் போலச் செய்து சோமகேதுவுக்கு அளித்தாளே. அவ்வாறு ஹேமலதா செய்திருக்க மாட்டாள். எனவே தான் சோமகேது சுவர்ணலதாவை அந்தப்புரத்தில் இருக்க நயமாகச் சொன்னான். மனைவி எப்போதும் கணவனோடு இருக்க விரும்புவது இயல்பே. ஆனால் அந்தக் கணவன் அரசன் என்றாகும்போது எல்லோருக்கும் தக்கபடி நடக்க வேண்டியதாகிறது. தயாளசிம்மன் கூறிய கதையில் வரும் சோமகேதுவை ஜெயசிம்மனாயும் மேகலாவை சுவர்ணலதாவாகவும் சோபனாவை ஹேமலதாவாகவும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். அக்கதையைக் கூறிய தயாளசிம்மன் அவ்வாறு ஒப்பிட்டுப் பார்த்தான். அதனால்தான் அவன் ஜெயசிம்மனுக்கும் சோபனாவுக்கும் திருமணம் செய்து வைத்தான். இது புத்தி சாலித்தனமே ஆகும்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே வேதாளம் அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பிச் சென்று மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# அம்புலிமாமா செய்திகள்



## நம்பிக்கை ஒளி

அண்மையில் மூன்று சிறுவர்களைப் பற்றிய செய்திகள் வெளியாகின. மூவரும் அமெரிக்காவில் உள்ளவர்கள். இவர்களில் பெரியவன் அமெரிக்காவில் குடியேறிய இந்தியரின் வழி வந்தவன். இவ்வாண்டு ஜனவரி 20ல் அமெரிக்க அதிபராக பில் கிளிண்டன் பதவி ஏற்றதை ஒட்டி நடந்த விருந்திற்கும் பல பிரமுகர்கள் அழைக்கப்பட்டிருந்தனர். பில் கிளிண்டனால் அப்போது 'நம்பிக்கை ஒளி' எனப் பாராட்டப்பட்ட சிறுவன்தான் ரோஜர்குட்டன். இவனது தந்தை டாக்டர் அப்புக்குட்டன் அமெரிக்கவாசி. இவர் கேரளத்திலிருந்து அங்கு சென்றவர். ரோஜர்குட்டன் விருந்திற்குப் பின் வீடு திரும்பியதும் "வரலாற்றுப் புகழ்பெற்ற ஒரு நிகழ்ச்சியை கண்டதோடல்லாமல் அதில் கலந்து கொண்டது எனக்கு எவ்வளவோ மகிழ்ச்சியை அளிக்கிறது" என்றான்.

ரோஜரின் உண்மைப் பெயர் ராஜ். அவன் தன் மூன்றாவது வயதிலிருந்தே மோட்டர் கார் நம்பர்களைக் கண்டு அது இன்னாருடையது எனக் கூறுபவன். இவனை இவனது தந்தை ஹாக்கின்ஸ் பல்கலைக் கழகத்தில் சேர்க்க இவன் நுழைவுத் தேர்விலேயே 90% பெற்றும், ஒன்பதாவது வயதிலேயே கணிதத்தில் பட்டமும் பெற்றான். அதன்பின் வால்ஸ்ட்ரீட் கோடீஸ்வரர்களின் 'மனி மேனேஜராக' ஆனான். இப்போது இவன் அமெரிக்க அதிபரின் பொருளியல் ஆலோசகர்களில் ஒருவன்.

## அமெரிக்க அரசாங்கத்திற்கு நன்கொடை

அமெரிக்காவில் வட டகோடா போர்கோவைச் சார்ந்த லாரி வில்லோ என்ற சிறுவனின் வயது 14. இவன் செடிகளை விற்று கிடைத்த பணத்தில் 1000 டாலர்களை அமெரிக்க அரசாங்கத்திற்கு நன்கொடையாக அளித்திருக்கிறான். அதிபர் கிளிண்டன் இதனை ஏற்று பட்ஜெட்டில் ஏற்பட்டுள்ள பற்றாக்குறையை மக்கள் இவ்வாறு போக்க வேண்டும் என வேண்டுகோள் விடுத்தார். லாரி தன் நன்கொடையை 'எய்ட்ஸ்' நோயைப் போக்க பயன்படுத்துமாறு அதிபரை வேண்டிக் கொண்டிருக்கிறான்.



## வயதில் சிறிய வெளியீட்டவன்

அமெரிக்காவில் 'லேட்நைட்' தொலைக்காட்சிப் பகுதியை நிர்வகிக்கும் டேவிட் லெட்டர்மன்-க்ளென் எல்லிஸிற்கு சேர்ந்த பிளாக்ஸ்லாங்கி என்ற பத்து வயதுச் சிறுவனை பேட்டி கண்டார். நான்காவது வகுப்பில் படிக்கும் இவன் 'அவுட் ஆப் தி வேல்ட்' என்ற செய்தித் தாளைத் தன் நான்காவது வயதிலிருந்து நடத்தி வருகிறான். உலகம் முழுவதிலும் இதற்குச் சந்தாதாரர்கள் உள்ளனர். இச்சிறுவனை பேட்டி கண்ட டேவிட்டும் சந்தாதாரராம்.

# அம்புலிமாமா அனுபந்தம்—54

நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

## சிறுத்தைப் புலி

உடல்மீது புள்ளிகளைக் கொண்ட சிறுத்தைப் புலிகளை இரண்டு விதமாகப் பிரிக்கலாம். ஒரு வகைக்கு உடல்மீது சிறு சிறு வட்டமான புள்ளிகள் இருக்கும். இரண்டாவது வகைச் சிறுத்தைகளுக்குப் பெரிய பெரிய புள்ளிகள் இருக்கும். முகத்திலும் கழுத்திலும் வரிகளும் வாலில் வட்டமான கோடுகளும் இருக்கும். புலியைப் போல இதுவும் பூனை இனத்தை சார்ந்ததே. இவை புலியைவிடச் சிறியவை. சாதாரணமாய் மஞ்சள் பச்சை நிறத்தில் இருக்கும். கருப்பு சிறுத்தைப் புலிகள் மிகமிக குறைவே. நம்நாட்டில் புலிகள் அழிந்து கொண்டே வந்தாலும் சிறுத்தைப் புலிகளுக்கு அந்த நிலை இன்னமும் ஏற்படவில்லை. இவை நாடெங்கிலும் உள்ளன. அவ்வப்போது கிராமங்களில் புகுந்தும் விடும்.

இமயமலைப் பகுதியில் வாழும் சிறுத்தைப் புலிகள் இருவகைப்படும். கிழக்கு இமயப் பகுதியில் உள்ளவை சாம்பல் நிறத்திலும் பனிபடர்ந்த மலைகளில் பனிப் புலிகளும் உள்ளன. இவை மிக அழகானவை. கருப்புப் புள்ளிகளுடன் விளாங்காய் நிறத்தில் உள்ளன. இவற்றின் தோல்களுக்கு நல்ல கிராக்கி. எனவே இவற்றைப் பெரும் அளவில் வேட்டையாடுகிறார்கள். இமயமலைப் புலிகள் சாதாரண சிறுத்தைகளை விடச் சிறியவை.

புலிக்கு மரம் ஏறத் தெரியாது. ஆனால் சிறுத்தைப் புலியோ மிக நன்றாக மரத்தில் ஏறி விடும்.





# நம் தற்கால இலக்கியம்

பல மொழிகளையும், பல்விதப் பண்பாட்டுகளையும் கொண்ட நம் நாட்டில் ஒவ்வொரு மொழியிலும் உயரிய இலக்கியப்படைப்புகள் தோன்றி வருகின்றன. பலர் பண்டைய இலக்கியம் பற்றி அறிவார்கள். ஆனால் நம் நாட்டின் வெவ்வேறு மொழிகளில் வெளியாகும் தற்கால இலக்கியம் பற்றி அவ்வளவாக அறிந்திருக்க மாட்டார்கள். பல்வேறு இந்திய மொழிகளில் வெளியான உயர்ந்த கதைகள், புதினங்களின் சுருக்கத்தை இத்தொடரில் அளிக்கிறோம். இவற்றை இளைஞர்கள் உற்சாகத்துடன் படிப்பார்கள் என்றே நம்புகிறோம்.

ஆசிரியர்

## ஜாவர்சந்து மேகானியின் 'மன்னை-ந-திவ்'

வானவெளியில் விண்மீன்கள் மட்டும் அந்த அமாவாசை இரவில் மின்னிக் கொண்டிருந்தன. அந்த நள்ளிரவில் தன்னந்தனியாகச் சென்று கொண்டிருந்த ஒரு மனிதரை ஒரு திருடர் கூட்டம் வழி மடக்கியது. அவர்கள் பேச்சிலிருந்து அத்திருடர்கள் அருகிலுள்ள ஒரு கிராமத்தைத் தாக்கிக் கொள்ளை அடிக்கப் போய்க் கொண்டிருக்கிறார்கள் என்பது தெரிந்தது. திருடர் தலைவன் அந்த மனிதரிடம் "நில் அப்படியே. ஒரு அடி எடுத்து வைத்தால் உன் உயிரே போய்விடும்" என்று எச்சரித்தான்.

அவரோ "நான் உயிருக்கு பயப்படவில்லை. உன்னிடம் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன்" என்றார். அத்தலைவனும் "என்னிடமா? என்ன சொல்லப் போகிறாய்?" என்று கேட்டான். அவரும் "நான் தேச பக்தன். நம் தாய் நாட்டை அடிமைப்படுத்தி ஆளும் அன்னிய நாட்டவரின் கொடும் செயல்களை எதிர்த்துப் போராடி நாட்டின் விடுதலைக்காகப் போராடிக் கொண்டிருக்கிறேன்" என்றார்.

அத்தலைவனும் "அப்படிப் பார்த்தால் ஒருவிதத்தில் நாங்களும் உன்னைப் போலப் போராட்டத்தில் ஈடுபட்டவர்கள்தாம். கொடுமைக்காரர்களான பணக்காரர்களின் வீடுகளில் சிறைப்பட்டுக் கிடக்கும் லட்சுமி தேவியை விடுவிக்கப் போகிறோம். நாங்கள் பணக்காரர்களின் வீடுகளிலுள்ள லட்சுமி தேவியின் ஈனக் குரலைக் கேட்கிறோம்" என்று ஏளனமாகக் கூறினான்.

அப்போது அவர் "நீங்கள் பணக்காரர்களின் பணத்தை மட்டுமா கொள்ளை அடிக்கிறீர்கள்? அப்பாவி ஏழை மக்களைத் துன்புறுத்துவது இல்லையா?" என்று கேட்டார். "இல்லை. அப்பாவி ஏழை மக்களை நாங்கள் ஒன்றுமே செய்வதில்லை" என்றான் அவன்.

அப்போது அவர் "அப்படியானால் ஏழை மக்கள் உங்கள் பெயரைக் கேட்டாலே ஏன் நடுங்குகிறார்கள்? நீங்கள் வருவது தெரிந்ததும் தம் தட்டுமுட்டு சாமான்களை

எடுத்துக் கொண்டு ஏன் ஊரைவிட்டு ஓடுகிறார்கள்? நீங்கள் ஒரு கிராமத்தைக் கொள்ளை அடித்துப் போனபின் காவல்துறையினர் அந்த கிராம மக்களை துன்புறுத்துவது ஏன்? உங்களைப் பிடிக்கவே. அதில் எவ்வளவு அப்பாவிகள் படாதபாடு படுகிறார்கள்? இதற்கெல்லாம் யார் காரணம்? '' என்று கேட்டார்.

அக்கேள்விகளுக்குத் திருடர் தலைவனால் பதில் சொல்ல முடியவில்லை. அவன் தன் கூட்டத்தோடு திரும்பிப் போய்விட்டான். அந்த மனிதரோ அடுத்த ஊருக்குப் போய்த் திருடர்கள் அங்கு வரப் போவதைத் தெரிவித்தார். அந்த ஊராரும் பயந்து போய் தம் கைக்குக் கிடைத்த சாமான்களை எடுத்துக் கொண்டு ஊரைவிட்டே ஓடி விட்டார்கள். ஆனால் திருடர்கள் மட்டும் வரவே இல்லை!

அத்திருடர்களின் மனம் மாறச் செய்த அந்த மனிதர் தாம் குஜராத்தில் புகழ்பெற்ற சமூக சீர்திருத்தவாதியான ரவிசங்கர் மகராஜ்.

மக்கள் 1927 லிருந்தே ரவிசங்கர் மகராஜைப் பற்றி புகழ்ந்து கூறலாயினர். துன்பத்




தில் வாடும் ஏழைகளுக்கு அவர் ஆறுதல் கூறி அதனைப் போக்கலானார். அவர் அரிய சக்திகள் கொண்டவர் என மக்கள் நம்பினர். அவர் கொடிய மனிதர்களோடு கொடிய மிருகங்களையும் நல்வழிப்படுத்துபவர் என அவர்கள் நம்பினார்கள். மக்கள் கொடியவர்கள் எனக் கருதியவர்களை எல்லாம் அவர் திருத்தி நல்வழிப்படுத்தும் திறமை கொண்டவர் என யாவரும் கருதினர்.

நூறு வயதிற்கு மேல் வாழ்ந்து பின்னர் அமரரான ரவி சங்கர் மகராஜின் வாழ்க்கை வரலாறுதான் குஜராத் மொழியில் 'மன்னை-ந-திவ' என்ற பெயரில் வெளியிடப் பட்டுள்ளது. விறுவிறுப்பான ஒரு நாவலைப் போல எழுதப்பட்ட இந்த வாழ்க்கை வரலாற்றின் ஆசிரியர் ஜாவர் சந்து மேகானி (1897-1947) இவர் பல நாவல்களையும் நாடகங்களையும் சிறுகதைகளையும் கவிதைகளையும் படைத்துள்ளார்.

# உங்களுக்குத் தெரியுமா?

1. தாஜ்மஹலை ஒட்டி ஓடும் நதி எது?
2. நம் லோக்சபாவிற்கு அதிக உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் மாநிலம் எது?
3. சமாதானச் சின்னமாக எந்தப் பறவை விளங்குகிறது?
4. உலகிலேயே மிகப்பெரிய உயிரினம் எது?
5. 'கூச்சிப்பூடி' நடனம் எந்த மாநிலத்திலிருந்து வந்தது?
6. காரகோர வழி எந்த இருநாடுகளை இணைக்கிறது?
7. சீனாவில் பெய்ஜிங்கிற்கு அடுத்தபடி பெரிய நகரம் எது?
8. தற்போதைய பல்மாடிக்கட்டிடங்களில் உபயோகிக்கப்படும் 'லிப்டை'க் கண்டு பிடித்தவர் யார்?
9. வெள்ளி எந்த நாட்டில் மிக அதிகமாகக் கிடைக்கிறது?
10. அமைதிக்கான நோபல் பரிசைப் பெற்ற அமெரிக்க நீக்ரோத் தலைவர் யார்?
11. 'ஈபல் டவர்' எங்குள்ளது?
12. துருக்கியின் இஸ்டான்புல் நகரின் முந்தைய பெயர் என்ன?
13. நம் நாட்டிற்கு சுதந்திரத்தை இங்கிலாந்து நாடாளும் மன்றம் அளித்தபோது அந்நாட்டின் பிரதமராக இருந்தவர் யார்?
14. ஜியாமெட்ரியின் தந்தை எனப்படுபவர் யார்?
15. தென்அமெரிக்காவின் சிலி நாட்டில் பேசப்படும் மொழி எது?
16. வெள்ளை நிற தேசியக் கொடி எந்த நாட்டுடையது?
17. தற்கால வங்கி முறை எங்கு முதலில் ஆரம்பமாகியது?
18. கதவுகளுக்குப் பூட்டு போட்டு சாவியை உபயோகப்படுத்த முதலில் யார் கண்டு பிடித்தார்கள்?

## விடைகள்

1. யமுனை.
2. உத்திரப்பிரதேஷ்.
3. புறா.
4. நீலத்திமிங்கலம்.
5. ஆந்திர மாநிலம்.
6. பாகிஸ்தான், சீனா.
7. ஷாங்காய்.
8. எலிஷா ஓடிஸ்.
9. மெக்ஸிகோ.
10. மார்ட்டின் லூதர்கிங்.
11. பாரிஸ்.
12. கான்ஸ்டாண்டி நோபல்.
13. கிளெமண்ட் அட்லி.
14. யூக்லிட்.
15. ஸ்பானிய மொழி.
16. மேற்கு சஹாரா.
17. இத்தாலி.
18. எகிப்து நாட்டவர்.



# மனம் திருந்தினான்

வெகுநாட்களுக்கு முன் பெரிய பாளையத்தில் பெரியசாமி என்பவன் இருந்தான். அவன் மகாமண்டைக் கர்வம் பிடித்தவன். அவனுக்குக் கோபம் வந்தால் உற்றார் உறவினர் என்று கூடப்பாராமல் கண் மூடித்தனமாக அடித்து விடுவான். அந்த முரடனைக் கண்டு அந்த ஊரார் சற்று விலகியே நடந்து வந்தார்கள்.

ஒருநாள் அவனது வயலில் சின்னானின் எருமை புகுந்துவிட்டது. பெரியசாமி அதை 'அடி' 'அடி' என்று அடித்து விரட்டிவிட்டுச் சின்னானின் வீட்டிற்குப் போய் "ஏய் சின்னான்! உன் எருமை என் வயலில் புகுந்து வயலையே பாழாக்கிவிட்டது. உன் எருமை என் வயலில் புகுந்ததற்காக நீ தண்டனையை அனுபவித்தே ஆக வேண்டும். நீ ஒரு வாரத்திற்கு உன் எருமை கொடுக்கும் பாலை என் வீட்டிற்கு அனுப்ப வேண்டும். இல்லாவிட்டால் என் பசுக்களை உன் வயலில் மேயவிட்டு விடுவேன்" என்றான். சின்னானும் அவனோடு வம்பு எதற்கு என்று அதற்கு இணங்கினான்.

இன்னொரு நிகழ்ச்சி. மளிகைக் கடை மணவாளன் பெரியசாமிக்கு வெல்லம் விற்றபோது எடையில் கொஞ்சம் குறைந்து போயிற்று. பெரியசாமி கடைக்கு முன் நின்று "ஏய் மணவாளா! என்னையே ஏமாற்ற பார்க்கிறாயா? ஏன் வெல்ல எடை குறைந்தது?" என்று கத்தினான். மணவாளன் தாழ்ந்த குரலில் "எப்படியோ தவறு நடந்துவிட்டது. மன்னித்து விடு. என் கடையில் வாங்கும் சாமான்களின் எடை குறைகிறது என நீ நினைத்தால் இனிமேல்

—பாபநாசம் சாமா—



என் கடையில் சாமானே வாங்க வேண்டாம்'' என்றான்.

பெரியசாமியோ ''எனக்கா அறிவுரை கூறுகிறாய்? உன்னை கவனிக்க வேண்டிய விதத்தில் கவனிக்கிறேன்'' என்று கருவிக் கொண்டே சென்றான். அன்றிரவு மணவாளனின் கிடங்கின் ஒரு மூலையில் நெருப்பு பிடித்துக் கொண்டது. நெருப்பு அணைக்கப் பட்டது. என்றாலும் அது பெரிய சாமியின் வேலைதான் என்று எல் லோருக்கும் தெரிந்து விட்டது. ஆனாலும் அவனுக்கு எதிராக யாரும் ஒருவார்த்தை கூடப் பேச வில்லை.

இந்த சமயத்தில் எங்கிருந்தோ ஒரு சன்னியாசி வந்தார். அவர் அவ் வூரில் தங்கி ஒருவாரம் கூட ஆக வில்லை. ஊராரிடையே அவர் மிகவும் சக்தி வாய்ந்தவர் என்று புகழ் பரவிவிட்டது. அதனால் ஊரார் ஒவ்வொருவராக அவரைத் தம் வீட்டிற்கு அழைத்து உணவு படைக்கலாயினர். இதைக் கண்ட பெரியசாமி தன் மனைவியிடம் ''பைசா பெறாதவன் எல்லாம் அந்த சாமியாரை அழைத்து சாப் பாடு போடுகிறான். நான் என்ன குறைந்து விட்டேனா? நீ விருந்து சாப்பாடு சமைத்து வை. இன்று மத்தியானம் அந்த சாமியாரை நம் வீட்டில் சாப்பிட அழைத்து வரு கிறேன்'' என்று கூறிப் போனான்.

அவன் அந்த சன்னியாசியைக் கண்டு ''என்னைப் பற்றி இந்த வட்டாரமே அறியும் நான் சொல் வதற்கு யாரும் மறுபேச்சு பேச மாட்டார்கள். இன்று மத்தியானம் உமக்கு என் வீட்டில்தான் சாப் பாடு. தெரிந்ததா? சரியாகப் பனி ரெண்டு மணிக்கு வந்துவிடும்'' என்று அதிகார தோரணையில் கூறிவிட்டுப் போனான்.

மத்தியானம் பனிரெண்டு மணிக் குச் சற்று முன் சன்னியாசி பெரிய சாமியின் வீட்டிற்குக் கிளம்பும் போது பாம்பு கடித்துவிட்டது என்று ஒருவனை சிலர் சுமந்து வந்தார்கள். சன்னியாசி ''நல்ல மனம் படைத்தவர்களுக்கு நன்மையே

விளையும்'' என்று கூறி பாம்பு கடித்த அந்த மனிதனின் நெற்றியில் விபூதியை எடுத்துப் பூசி அவனது வாயிலும் கொஞ்சம் போட்டார். ஓரிரண்டு நிமிடங்களில் விஷம் இறங்கி அவன் மயக்கம் தெளிந்து எழுந்து விட்டான்.

இதற்குப் பின் சன்னியாசி பெரியசாமியின் வீட்டிற்குப் போன போது மணி பனிரெண்டரை ஆகி விட்டது. பெரியசாமி அவரை எரித்து விடுபவன் போலப் பார்த்து "நான் குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட வேலையைச் செய்பவன். ஏன் தாமதமாக வந்தீர்? நான் பனிரெண்டு மணிக்குச் சாப்பிட்டு விட்டேன். உமக்கு சாப்பாடு கிடையாது. நீர் போகலாம்'' என்றான்.

சன்னியாசியும் "ஒருவரைச் சாப்பிடக் கூப்பிட்டுவிட்டு அவர் வருமுன் சாப்பிடுவது ஒரு நல்ல வீட்டுக்காரனின் பண்பல்ல. நடந்தது என்னவோ நடந்து விட்டது. விருந்துக்கு வந்தவரை சாப்பிடச் சொல்லாமல் அனுப்புவது மகாப் பாவம்'' என்றார்.

அதைக் கேட்ட பெரியசாமி கோபம் கொண்டு "ஏய் பரதேசி! எனக்கா அறிவுரை கூறுகிறாய்?'' என்று கூறிப் 'பளா'ரென்று அவரது கன்னத்தில் ஒரு அறை அறைந்தான். இதைத் தெருவில் போன சிலர் பார்த்து விட்டு ஓடிவந்து பெரியசாமியைப் பிடித்து அடிக்கப் போனார்கள். ஆனால் சன்னியாசி அவர்களைத் தடுத்து "யாருக்கும் முரட்டுத்தனம் இருக்கக் கூடாது. நீங்கள் இவனை ஒன்றும் செய்யாதீர்கள். கடவுளே இவனுக்கு வழி காட்டுவார். என் பேச்சிற்கு மதிப்புக் கொடுத்து இவனை விட்டு விடுங்கள்'' என்றார்.



சன்னியாசியைப் பெரியசாமி அறைந்து ஆறு நாட்களானபோது அவனது வலது உள்ளங்கையில் ஒரு சிறுகட்டி கிளம்பியது. அது நாளாக ஆகப் பெரியதாகி அவனுக்கு ஒரே வலி ஏற்பட்டது. அவன் வைத்தியரிடம் சென்றபோது அவர் அது ராஜபிளவை என்றும் அது முற்றிவிட்டதால் அவனது

வலது கையையே வெட்டி எடுத்து விடவேண்டும் என்றும் அப்படிச் செய்யாவிட்டால் அவனது உயிருக்கே ஆபத்து என்றும் கூறிவிட்டார்.

அதைக்கேட்ட பெரியசாமிக்குத் தான் இறந்து போய்விடுவோமோ என்ற பயம் ஏற்பட்டது. சன்னியாசியை அறைந்ததாலேயே தனக்கு அந்த நிலை ஏற்பட்டது. என அவன் எண்ணி வருந்தலானான். அவன் தன் கையை இழப்பது தன் கௌரவத்திற்குக் குறைவு எண்ணினான். மேலும் ஒரு கை இல்லாமல் இருந்தால் ஊரார் எல்லாம் கேலி செய்வார்களே என்று எண்ணி மனம் புழுங்கலானான்.

இந்த நிலையில் அதே சன்னியாசி அந்த ஊருக்கு வந்தார். அவர் பெரியசாமியைப் பற்றி விசாரித்து அவனது நிலையை அறிந்து கொண்டார். அவர் தனியாகச் சென்று அவனைக் கண்டு "பெரியசாமி! எப்படியப்பா இருக்கிறாய்?" என்று கனிவுடன் கேட்டார்.

அவன் கண்ணீர்விட்டுக் கதறி "சுவாமி! என்னைப் பாருங்கள். நீங்களோ அல்லது கடவுளோ என்னைக் கடுமையாகத் தண்டித்து விட்டீர்கள்" என்று கூறி அவரது கால்களில் விழுந்தான். சன்னியாசி அவனைத் தூக்கி நிறுத்தி "நீ மனம் திருந்தி உன் செயலுக்கு வருந்துகிறாய். உன்னை தண்டித்தது வேறு யாருமல்ல. உன் முரட்டுத் தனமே. எங்கே, உன் கையைக் காட்டு பார்க்கலாம்" என்றார்.

பெரியசாமியும் கையை நீட்டவே அவர் அதில் விபூதியை எடுத்துத் தடவினார். மறுநிமிடமே அவனது உள்ளங்கைப் புண் மாயமாய் மறைந்தது. சன்னியாசி வேறு எதுவும் கூறாமல் அங்கிருந்து வெளியேறினார். அப்போது முதல் பெரியசாமி முற்றிலும் மாறிவிட்டான். அவன் எல்லோரிடமும் பணிவாகப் பேசி, நல்லவிதமாய் நடந்து யாவருக்கும் இரங்கி நற்பெயரைப் பெற்றான்.





# பயப்படாதவள்

வெகு காலத்திற்கு முன் துருக்கி நாட்டில் அமீர் என்ற ஏழை இருந்தான். அவன் மனைவி ஒரு பெண் குழந்தையைப் பெற்றுவிட்டு இறந்து போனாள். அமீர் அக்குழந்தைக்கு சல்மா என்று பெயரிட்டு வளர்த்து வரலானான். அவள் வளர்ந்து பெரியவளாகவே அவளது திருமணம் பற்றி அமீர் பெரிதும் கவலைப்படலானான். ஏனெனில் அவளது திருமணத்திற்காக அவனால் பணம் சேர்த்து வைக்க முடியவில்லை.

சல்மாசிறுவயது முதல் துணிச்சல்காரி. பேய் பிசாசு என்றால் சற்றும் பயப்படாதவள். ஒருமுறை அமீரின் வீட்டில் ஒரு சிறிய விருந்து நடந்தது. அதற்கு அமீரின் இளமைப் பருவ நண்பன் அகமது வந்திருந்தான். விருந்து பாதிராத்திரி வரை நடந்தது. அப்போது கடையிலிருந்து வாங்கி வந்த ரொட்டிகள் தீர்ந்து விட்டன. மேலும் சில ரொட்டிகள் தேவைப்படவே அமீர் மகளிடம் "நீ ஓடிப் போய் தாதாவின் கடையிலிருந்து ரொட்டி வாங்கி வா" என்று கூறினான்.

அதைக் கேட்ட அகமது "தாதாவின் கடைக்கா? அது மயானத்தை அடுத்தல்லவா இருக்கிறது? இந்த நள்ளிரவில் பயமில்லாமல் இவள் போய் வரமுடியுமா?" என்று கேட்டான். அமீரும் "ஓ! போய் வருவாள். நீயே பார்" என்று கூறி சல்மாவை அனுப்பினான்.

சல்மாவும் அப்போதே தாதாவின் கடைக்குப் போய் ரொட்டிகளை வாங்கிக் கொண்டு திரும்பி வந்தாள். அப்போது அகமது அமீரிடம் "நாளை அமாவாசை. நாளை நள்ளிரவில் மயானத்

—துருக்கிப் பழங்காலக்கதை—



திற்கு உன் மகள் சல்மா போய் ஒரு மண்டை ஓட்டை எடுத்து வரமுடியுமா?'' என்று கேட்டான்.

அமீரும் ''ஓ! ஒன்றல்லா ஒன்பது மண்டை ஓடுகள் வேண்டுமானாலும் எடுத்து வருவாள் என்ன பந்தயம்? நூறு தங்க நாணயங்கள் கட்டுகிறாயா?'' என்று கேட்டான். அகமதும் அதற்கு ஒப்புக் கொண்டான்.

மறுநாள் அகமது கிழவனான கான் என்பவனைக் கூப்பிட்டு அன்றிரவு அவன் மயானத்திற்குப் போய் அங்கு சல்மா வரும் போது என்ன செய்ய வேண்டும் எனக் கூறி அதற்குக் கூலியாக நூறு தங்க நாணயங்களும் கொடுத்து அனுப்பினான்.

அன்று நள்ளிரவானதும் அகமது தன் நண்பன் அமீரின் வீட்டிற்குப் போய் சல்மாவிடம் அப்போதே மயானத்திற்குப் போய் ஒரு மண்டை ஓட்டை எடுத்து வரும்படி கூறினான். சல்மாவும் தன் தந்தையின் அனுமதி பெற்று மயானத்திற்குச் சென்றாள்.

அங்கு அவள் ஒரு மண்டை ஓட்டை எடுத்த போது ஒரு பள்ளத்திலிருந்து ''அதை எடுக்காதே. அது என் தந்தையின் மண்டை ஓடு'' என்று குரல் கேட்டது. சல்மா அதைக் கீழே போட்டு விட்டு வேறொரு மண்டை ஓட்டை எடுத்த போது அதே குரல் ''அதை எடுக்காதே. அது என் தாயின் மண்டை ஓடு'' என்றது.

சல்மா இது ஏதோ மர்மமாயுள்ளது என எண்ணி மெதுவாகக் குரல் வந்த பள்ளத்தின் அருகே சென்றாள். பள்ளத்தினுள் பதுங்கி இருந்த கானின் வழுக்கைத் தலை அவளுக்குத் தெரிந்தது. அவள் உடனே ''ஏய் வழுக்கைத் தலைப் பிசாசே! வாயை மூடிக் கொண்டிரு'' எனக்கூறி ஒரு கல்லை எடுத்து அந்தத் தலைமீது நாலைந்து அடிகள் கொடுத்து ''மறுபடியும் வாய்திறந்தால் உன் தலை சுக்கு நூறாகிவிடும் தெரியுமா?'' என எச்சரித்தாள்.

அடி வாங்கிய கானால் எது

வுமே பேசமுடியவில்லை. சல்மாவோ ஒரு மண்டை ஓட்டை எடுத்துக் கொண்டு தன் வீட்டிற்கு வந்தாள். அகமது பந்தயத்தில் தோற்றுவிட்டான். அதனால் அவன் அமீருக்கு நூறு தங்க நாணயங்களைக் கொடுத்தான்.

சல்மாவின் ஊருக்கு அருகிலுள்ள வேறொரு ஊரில் சுலைமான் என்ற பணக்காரவாலிபன் இருந்தான். அவன் மிகவும் அழகானவனும் ஆவான். ஆனால் அவனுக்குத் தம் மகளைக் கொடுக்க யாருமே முன்வரவில்லை. ஏனென்றால் அவன் வீட்டில் இறந்த அவனது தாய் பிசாசாக மாறி சுற்றி வந்தாள். அதனால் அந்த வீட்டில் வேலை செய்யக்கூட எந்தப் பெண்ணும் துணிவு கொள்ளவில்லை.

சல்மாவின் துணிச்சல் பற்றிக் கேள்விப்பட்ட சுலைமான் அவள் ஊருக்கு வந்து அவளுக்கு நிறைய சம்பளம் கொடுப்பதாகக் கூறித் தன் வீட்டில் வேலை செய்ய அவளை அழைத்துப் போனான். சல்மா சுலைமானுக்கு உணவு பரிமாறும் போதெல்லாம் இன்னொரு தட்டிலும் உணவு வைத்து "அம்மா! உங்களுக்கும் உணவு வைத்திருக்கிறேன். எடுத்து சாப்பிடுங்கள்" எனக் கூறலானாள். தாய்ப் பிசாசும் அதனால் மிக மகிழ்ந்து போயிற்று.

ஒருநாள் சுலைமான் தன் வியா



பாரத்தின் பொருட்டு நகருக்குச் செல்ல வேண்டியதாயிற்று. அன்றிரவு சல்மா வீட்டு வேலைகளைச் செய்து கொண்டிருந்த போது தாய்ப்பிசாசு வந்து "ஏய் பெண்ணே! என்னைக் கண்டு உனக்குப் பயம் இல்லையா?" என்று கேட்டது.

சல்மாவும் "பயமா? எனக்கு யாரிடத்திலும் பயமே இல்லை. நீங்களோ ரொம்ப நல்லவராயிற்றே. நான் ஏன் பயப்பட வேண்டும்?" என்றாள். அதைக் கேட்ட தாய்ப்பிசாசு சிரித்து "உன்னை எனக்கு மிகவும் பிடித்துப் போயிற்று. நீ என் மகனுக்கு மனைவியாகத் தகுந்தவளா என்ப

தற்கு ஒரு பரீட்சை வைக்கப் போகிறேன். அதில் நீ தேறுகிறாயா பார்க்கலாம்'' என்றாள்.

சல்மாவும் என்ன பரீட்சை எனக் கேட்கவே பிசாசும் ''இந்த வீட்டின் நிலவறைக்கு நள்ளிரவில் நீ என்னோடு வருவாயா?'' என்று கேட்டது. சல்மாவும் வரத் தயார் எனவே பிசாசு அவளை அழைத்துக் கொண்டு நிலவறைக்குச் சென்றது. வழியில் செங்கல் இடிந்து சிதறிக் கிடந்தது.

பிசாசு அந்தக் கற்களை அப்புறப்படுத்தும்படி சல்மாவிடம் கூறியது. சல்மாவும் அவ்வாறே செய்ய ஒரு பள்ளத்தில் இரு பித்தளைக் குடங்கள் தென்பட்டன ஒன்று பெரிது. மற்றது சிறியது. அவற்றில் தங்க நாணயங்கள் நிரம்பி இருந்தன. பிசாசு சல்மாவிடம் ''இதில் பெரிய குடத்தை என் மகனிடம் கொடு. சிறியதை நீ எடுத்துக் கொள். இனிமேல் நான் அந்த வீட்டிற்கு வரமாட்டேன். இனிமேல் நீதான் என் மகனைப் பார்த்துக் கொள்ளப் போகிறாயே'' என்று கூறி மறைந்து விட்டது.

சல்மா அந்தக் குடங்களை எடுத்துக் கொண்டு வீட்டிற்குள் போனாள். மறுநாள் காலை சுலைமான் நகரிலிருந்து வந்ததும் முன் இரவில் நடந்ததை எல்லாம் கூறி ''உங்கள் அம்மா பெரிய குடத்தை என்னை எடுத்துக் கொள்ளச் சொன்னாள். உங்களுக்கு சிறிய குடம்'' என்றாள்.

சுலைமானும் ''நானோ உன்னை மணக்கப் போகிறேன். அதனால் யாருக்கு எந்தக் குடம் என்ற பிரச்னையே இல்லை. இனி எல்லாம் நம்முடயதே'' என்றான் சிரித்துக் கொண்டே.

சல்மா தன் ஊருக்குப் போய் தன் தந்தையிடம் விஷயத்தைக் கூறினாள். அமீரும் மகிழ்ந்துபோய் சல்மாவுக்கும் சுலைமானுக்கும் திருமணம் செய்து வைக்கச் சம்மதித்தான். அவர்களது திருமணமும் சிறப்பாக நடந்தது.






இராமர் தேவந்திரன் கொடுத்த ரதத்திலிருந்து அம்புகளைத் தன் மீது எய்வதைக் கண்ட இராவணன் கடுங்கோபம் கொண்டான். அவன் காந்தர்வாஸ்திரத்தை எய்யவே இராமர் அதைத் தடுத்துப் பயனற்றுப் போகச் செய்தார். அதன் பின் இராவணன் எய்த திவ்யாஸ்திரமும் முந்தைய அஸ்திரத்தின் கதியையே அடைந்தது.

தான் எறிந்த இரண்டு சக்தி வாய்ந்த அஸ்திரங்களும் பயனற்றுப் போனது கண்டு இராவணன் மிக பயங்கரமான ராட்சஸாஸ்திரத்தை விடுத்தான். அதிலிருந்து பல விஷப்பாம்புகள் 'உஸ்' 'உஸ்' ஸென்று சீறிக் கொண்டு வெளி வந்தன. அப்போது இராமர் கருடாஸ்திரத்தை எய்யவே அதிலிருந்து பல கருடப்பட்சிகள் வெளி வந்து சீறி வந்து கொண்டிருந்த விஷப் பாம்புகளைக் கொத்திக் கொன்றன.

இதனால் ஆத்திரம் அடைந்து இராவணன் அம்புகளை இராமர் மீது மழைபோலப் பொழியலானான். ஒரு வலுவான அம்பினால் இராமரது தேர்க்கொடியை அறுத்துத் தள்ளினான். விபீஷணனும் வானரர்களும் இராவணனின் கை மேலோங்குவது கண்டு கலங்கிப் போனார்கள்.

இராமரைக் கொல்ல இதுவே தக்க தருணம் என நினைத்த இரா

—இராவணன் மாண்டான்—



வணன் தேவேந்திரனின் வச்சிராயுதத்திற்குச் சமமான ஒரு திரிசூலத்தை எடுத்து எறிந்தான். அது கரும்புகையைக் கக்கிக் கொண்டு நெருப்புப் பொறிகளைச் சிதறியவாறே பாய்ந்து சென்றது.

இராவணன் அட்டகாசமாய்ச் சிரித்து "அடே இராமா! இதோ வருகிறதே சூலம். இது உன் உயிரை வாங்கிவிடப் போகிறது என் சகோதரனையும், மகனையும் உற்றார் உறவினர்களையும் கொன்ற உன்னைப் பழி வாங்கிவிட்டேன். அடுத்து இலட்சுமணன். அவன் எனக்கு எம்மாத்திரம்?!" என்று உரக்கக் கூவினான்.

பயங்கரமாய் அனலைக் கக்கிக் கொண்டு வரும் அந்தத் திரிசூலத்தை இராமர் இந்திரன் கொடுத்த மகாசக்தியை எடுத்து அதன்மீது விடுத்தார். அது அந்த சூலத்தை பலமாகத் தாக்கி அதனை இரண்டாக முறித்து வீழ்த்தியது.

அதுகண்டு இராவணன் திகைக்கவே இராமர் அவன்மீது தொடர்ந்து அம்புகளை எய்தார். இராவணனால் அவற்றிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ளக் கூட முடியவில்லை. இதைக் கவனித்த இராவணனின் தேரோட்டி ரதத்தை வேகமாக வேறு இடத்திற்குச் செலுத்திச் சென்று விட்டான். இராட்சஸர்களோ தமக்குத் தோல்விதான் என்று அஞ்சினார்கள்.

தனது ரதம் போர்க்களத்திலிருந்து அப்பால் ஓட்டிச் செல்லப்பட்டது கண்டு இராவணன் தன் தேரோட்டியைக் கோபித்துக் கொண்டு "என்ன இது? நான் சொல்லாமலேயே ரதத்தைப் போர்க்களத்திலிருந்து இங்கு ஓட்டிக் கொண்டு வந்துவிட்டாயே! நான் பயந்து போய்விட்டேன் என்றா நினைத்தாய்? என்னால் ஆயுதங்களைச் சரியாகப் பிரயோகிக்க முடியவில்லை என்றா எண்ணிவிட்டாய்? நீ செய்த இந்தச் செயல் எனக்கு எவ்வளவு அவமானத்தை ஏற்படுத்தி விட்டது பார்! உடனே ரதத்தைப் போர்க்களத்திற்கு ஓட்டிச் செல்" என்று

கடிந்து கொண்டான்.

அதுகேட்டுத் தேரோட்டியும் "தங்களின் நன்மையைக் கருதியே நான் ரதத்தைப் போர்களத்திலிருந்து இங்கு ஓட்டி வந்தேன். இராமரது தாக்குதல்களைத் தங்களால் சமாளிக்க முடியாமல் போனதைக் கண்டேன். தாங்கள் மிகவும் களைத்தும் போயிருந்தீர்கள். நம் ரதத்தின் குதிரைகளும் கூடக் களைத்துப் போய்விட்டன. தங்களுக்கும் குதிரைகளுக்கும் சற்று ஓய்வு வேண்டும் என நினைத்தே ரதத்தை இவ்வளவு தூரம் ஓட்டி வந்தேன். ஒரு தேரோட்டி தன் ரதத்தை எப்படி எப்போது எங்கு ஓட்டிச் செல்ல வேண்டும் என்பதை அறிந்திருக்க வேண்டும். அப்படி அறிந்து செயல்படாதவன் தேரோட்டியாக இருக்கத் தகுதியற்றவன். எனவே நான் என் கடமையைச் செய்தேன். இப்போது என்ன செய்ய வேண்டும் என்று தாங்கள் உத்தரவிட்டால் அதன் படியே நடக்கிறேன்'' என்றான்.

அதுகேட்டு இராவணன் கோபம் தணிந்து "ஆம். இந்த நிலையில் நீ செய்தது சரியே. போர்களத்திற்குத் திரும்பிப் போ. நான் இந்த இராமனை இன்று கொன்றே ஆக வேண்டும். இனியும் நான் களைத்துப் போவேன் என நினைக்காதே'' என்றான். தேரோட்டியும் ரதத்தைப் போர்க்களத்திற்கு ஓட்டிச்



சென்று இராமர் முன் நிறுத்தினான்.

இதே சமயம் இராமரும் இராவணனுடன் போர் புரிந்ததில் மிகவும் களைத்துத்தான் போயிருந்தார். அப்போது தேவர்களோடு வந்து போரைப் பார்த்துக் கொண்டு வானவீதியில் இருந்த அகஸ்திய முனிவர் இராமரருகே வந்து "இராமா! உன் களைப்பு நீங்குவதற்கும் மீண்டும் போர்புரிய உற்சாகம் ஏற்படவும் உனக்கு ஆதித்த இருதயம் என்ற ஸ்தோத்திரத்தை உபதேசிக்கிறேன். அதனை ஜெபித்து புதிய சக்தி பெற்று இராவணனுடன் போர்புரி'' என்று கூறி அதனை உபதேசித்தார்.



இராமரும் அதனை மும்முறை ஜெபித்து புதிய சக்தியையும் உற் சாகத்தையும் பெற்று இராவண னுடன் போர்புரியச் சென்றார். அவர் தன் தேரோட்டியான மாதலியிடம் "இன்று நான் இரா வணனைக் கொல்வது உறுதி. எனவே நீ ரதத்தைச் சாமார்த்திய மாக ஓட்டிச் செல்ல வேண்டும். இதுபற்றி உனக்கு நான் அதிகம் கூறவேண்டியது இல்லை. உனக்கே சமயத்திற்குத் தகுந்தபடி எப்படி எல்லாம் நடக்க வேண்டும் என்ப தும் தெரியும். ஆயினும் சற்று எச்சரிக்கையாக இருக்கவே இதை உனக்குச் சொன்னேன்" என்றார்.

மாதலியும் ரதத்தை வேகமாக ஓட்டினான். அப்போது கிளம்பிய புழுதி இராவணனைச் சூழ்ந்து மறைத்தது. இராவணன் கோபம் கொண்டு அம்புகளை எய்யலா னான். இராமரும் இந்திரன் தனக் குக் கொடுத்த வில்லையும் அம்பு களையும் எடுத்துக் கொண்டு இராவணனை எதிர்க்கலானார்.

அந்தப் போர் மிகவும் பயங்கர மாக நடைபெற்றது. இருதரப்புப் படைகளும் தம் தாக்குதல்களை நிறுத்திவிட்டு அவர்களிருவரும் போர்புரிவதை ஆச்சரியத்துடன் பார்த்து நின்றன. இராமரும் இரா வணனும் கூட அதுவே இறுதிப் போர் என்றும் அதில் இரண்டில் ஒன்று என முடிவைக் கண்டு விடு வது என நினைத்தே போர்புரிந்து கொண்டிருந்தார்கள்.

சற்று நேரம் போர் மிகக் கடுமை யாக நடந்தது. அப்போது இரா மர் ஒரு அம்பை எய்து இராவண னின் தலையைத் துண்டித்துத் தரைமீது உருளச் செய்தார். ஆனால் இராவணனுக்கு மறுபடி யும் தலை முளைத்து வந்துவிட் டது. இராமர் இராவணனனின் தலையை வெட்டி வெட்டி வீழ்த் திய போதெல்லாம் மீண்டும் மீண் டும் அவன் தலை முளைத்து வந்து கொண்டு இருந்தது. இவ்வாறு நூற்றியொரு முறை நடக்கவே அதுகண்டு இராமர் ஆச்சரியப் பட்டார்.



அதற்குமுன் தான் தண்டகாரண் யத்தில் விராதனையும் கிரௌஞ்சா ரண்யத்தில் கபந்தனையும் கொல்ல உபயோகித்த பாணங்களால் ஏன் இராவணனைக் கொல்ல முடியாது போயிற்று என இராமர் எண்ணித் திகைப்புற்றார். அவர் போரை விடாது நடத்திக்கொண்டே இருந் தார்.

இராமரின் அம்புகளால் இரா வணனை ஏன் எதுவும் செய்ய முடியவில்லை என்பது மாதலிக் குத் தெரியும். இராவணன் இறக்க வேண்டிய வேளை இன்னமும் வர வில்லை என்பதுதான் அது. இராம ரும் இராவணனும் போர் புரிந்து கொண்டே இருக்கட்டும் என்றும் அந்தவேளை நெருங்கும் போது இராமரிடம் சொல்லி அதற்கான அஸ்திரத்தை எய்யச் சொல்வதென அவன் எண்ணிக் கொண்டான்.

மாதலி எதிர்பார்த்த வேளை வந்து விட்டது. அவன் உடனே இராமரிடம் "இதுதான் சரியான நேரம். இனியும் தாமதிக்காமல் சட்டென்று பிரம்மாஸ்திரத்தை எய்து அவனைக் கொல்லுங்கள்" என்றான்.

மாதலி இவ்வாறு கூறியதும் இராமர் பயங்கரப் பாம்பு வடிவம் கொண்ட ஒரு அம்பை எடுத்துக் கொண்டார். ஒளிமயமாய் விளங் கும் அதனை பிரம்மா தேவேந்திர னுக்குக் கொடுத்திருந்தார். கன மான சக்தி வாய்ந்த அதனை அவர் தம் வில்லில் வைத்து பிரம்மாஸ் திரத்தை முறைப்படி ஜெபித்து இராவணன் மீது எய்தார். அது இராவணனின் மார்பைத் தாக்கி அதில் ஊருடுவி முதுகுப்புறமாக வெளியே சென்றது.

இராவணன் பிடித்திருந்த வில் கீழே விழுந்தது. அவனும் தன் ரதத்திலிருந்து கீழே விழுந்தான். அவனது ஆவி அவனது உடலை விட்டுப் பிரிந்தது. இராவணன் விழுந்து மாண்டுபோனது கண்டு இராட்சஸப் படைகள் "ஐயோ" எனக் கத்திக் கொண்டு பயந்து இலங்கை நகருக்குள் ஓடிப் போயின. வானரர்களோ அவர்

களைத் துரத்திப் போய் எவ்வளவு பேர்களை அடித்துக் கொல்ல முடியுமோ அவ்வளவு பேர்களை அடித்துக் கொன்றன.

இராவணன் இறந்தது கண்டு தேவர்கள் மகிழ்ச்சியால் சங்க நாதம் செய்தார்கள். வானத்திலிருந்து மலர்மாரி பொழிந்தார்கள். தேவர்களும் யட்சர்களும் கின்னரர்களும் இராமரைப் புகழ்ந்து தோத்திரம் செய்யலானார்கள்.

வானர வீரர்கள் ஆனந்தக் கூத்தாடினார்கள். சுக்கிரீவன் அங்கதன் ஆகியோரின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லாது போயிற்று. விபீஷணனும் மற்ற வானரப் பிரமுகர்களும் இராமரையும் இலட்சுமணனையும் மிகவும் பாராட்டிப் புகழ்ந்தார்கள்.

இவ்வளவு இருந்தும் விபீஷணனுக்குத் தன் தமையன் இறந்ததால் துக்கம் ஏற்பட்டது. சீதையைக் கவர்ந்து வந்த பாவத்திற்காக அவன் உரிய தண்டனையை அடைந்து விட்டான் என்றாலும் உண்மையிலே அவன் நன்கு படித்தவன். தவம் புரிந்து அரிய சக்திகள் பெற்றவன். வீரதீர பராக்கிரம சாலி. இவ்வளவு இருந்தும் மனம் பேதலித்ததால் இந்த நிலை அவனுக்கு ஏற்பட்டது.

விபீஷணன் தன் அண்ணன் இறந்ததற்காக சோகமுற்றிருக்கிறான் என்பதை இராமர் கண்




டார். அவர் அவனைத் தேற்றி "இராவணனின் மரணம் சாதாரண மரணம் அல்ல. வீர மரணம். போர்க்களத்தில் நேருக்கு நேர் சரி சமமாக நின்று போர் புரிந்து உயிர் நீத்தவன். மகா வீரனானாலும் போர் என்று வந்து விட்டால் இறந்துதானே ஆகவேண்டும்? உன் அண்ணன் வீரனாகவே விளங்கி, வீரனாகவே போர் புரிந்து வீர சொர்க்கம் அடைந்து விட்டான். அதனால் நீ ஆறுதல் கொள். கவலைப்படாதே" என்று கூறினார். இராமர் இவ்வாறு கூறியது கேட்டு விபீஷணன் ஒருவாறு மனம் தேறினான்.

அதன்பின் அவன் இராமரின்

அனுமதி பெற்று தன் அண்ணனின் உடலை சாஸ்திரப்படி தகனம் செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்யலானான். இராவணன் இறந்த செய்தி கேட்டு அவனது மனைவிகள் அந்தப்புரத்திலிருந்து கிளம்பி வடக்கு வாசல் வழியாகப் போர்க்களத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அங்கு இராவணனின் உடல் கிடப்பது கண்டு அதன் மீது விழுந்து கதறிக் கதறி அழுதார்கள். விபீஷணனின் அறிவுரையைத் தம் கணவன் ஏற்று சீதையை இராமரிடம் ஒப்படைத்திருந்தால் அவனுக்கு இந்த முடிவு ஏற்பட்டிராதே என்று கூறிக் கண்ணீர் வடித்தார்கள்.

மண்டோதரியோ "மூவுலகையும் வென்று தேவர்களை எல்லாம் அடக்கிய தங்களுக்கு ஒரு மானிடனின் கையாலா மரணம் ஏற்பட்டது?" என்று புலம்பிப் புலம்பி அழுதாள்.

இராமர் விபீஷணனைத் தம் அருகே அழைத்து "விபீஷணா! இவர்களை எல்லாம் விரைவிலேயே அந்தப்புரத்திற்கு அனுப்பிவிட்டு நீ உன் தமையனின் உடலுக்கான தகனக் கிரியைகளை ஆரம்பி" என்றார்.

விபீஷணன் மனதில் அப்போது தான் தன் அண்ணனுக்கு இறுதிச் சடங்குகள் செய்வது முறையாகுமா என்ற சந்தேகம் ஏற்பட்டது. இராமரோ "நீ உன் தமையனுக்கு இறுதிச் சடங்குகளைச் செய்வது முற்றிலும் சரியே. உன்னை விட்டால் இதைச் செய்ய வேறு யார் இருக்கிறார்கள்? எனவே தயங்காதே" என்றார்.

சந்தனக் கட்டைகளைக் கொண்ட சிதை அமைக்கப்பட்டது. அதன்மீது ஒரு பட்டுத் துணியை விரித்து இராவணனின் உடலை அதில் கிடத்தினார்கள். விபீஷணன் குளித்து விட்டு வந்து எரியூட்டினான். அதன் பின் இராவணனின் மனைவிகளை இலங்காபுரிக்கு அனுப்பிவிட்டு அவன் இராமரிடம் சென்றான்.






# இப்படியா முடிவு!

படியூர் என்ற ஊரில் இருந்த பசுபதி என்ற இளைஞன் பல கலைகளைக் கற்றவன். அவனது தந்தை அவனுக்குக் கொஞ்சம் பணம் கொடுத்து "நீ பட்டணம் போய் பணம் சம்பாதித்துப் பெயரும் புகழும் பெற்றுவா" என்று கூறி அனுப்பினான்.

பசுபதி ஒரு காட்டு வழியே போன போது ஒரு மரத்தடியே தங்கி சற்று இளைப்பாறலானான். அப்போது அங்கு அவனைப் போன்ற ஒரு இளைஞன் வந்தான். பசுபதி அவனிடம் பேசி அவன் பெயர் சலீம் என்றும் அவனும் வேலை தேடிப் பட்டணத்திற்குப் போய்க் கொண்டிருக்கிறான் என்று தெரிந்த கொண்டான். பட்டணத்தில் எந்த நிலையிலும் இருவரும் சேர்ந்தே இருப்பது என்று முடிவு செய்த கொண்டார்கள்.

அவர்கள் இணைபிரியாத நண்பர்களாகி விட்டார்கள். அப்போது அவர்களைக் காட்டுவாசிகளின்.ஒரு கூட்டம்.சூழ்ந்து கொண்டது. அவர்களது தலைவன் அந்த இருவரிடம் "நாங்கள் எங்கள் தேவதைக்கு உங்களில் ஒருவரை நரபலி இடப்போகிறோம். அப்படி பலியாகப் போவது யார் என்பதை நீங்களே முடிவு செய்து கூறுங்கள்" என்றான்.

அப்போது பசுபதி "நான் உங்களோடு வருகிறேன்" எனவே சலீம் "இல்லை, இல்லை. நான் தான் உங்களோடு வருவேன்" என்றான்.

அதைக்கேட்டு அத்தலைவன் ஆச்சரியப்பட்டு "பலியாகப் போட்டி போடுகிறீர்களே. சரி இப்போது ஒருவனை பலி இடுகிறேன். ஆறுமாதங்களுக்குப் பிறகு

—எஸ். சோபினி—



இன்னொருவனை பலி இடுகிறேன்'' என்று கூறி அவர்கள் இருவரையுமே தன்னுடன் அழைத்துச் சென்றான்.

அத்தலைவனின் வீட்டை அடைந்ததும் சலீம் ''ஒரு மனிதனை மற்றொரு மனிதன் பலியிட்டால் அதனால் தெய்வம் சந்தோஷப்படுமா?'' என்று கேட்டான். பசுபதியோ ''இது இவர்களது அறியாமை'' என்றான். அவன் அத்தலைவனிடம் ''என்னை நீ பௌர்ணமியன்று தானே பலியிடப் போகிறாய்? அதற்கு இன்னும் பதினைந்து நாட்கள் உள்ளன. அதுவரை உனக்குச் சிலகதைகளைக் கூறுகிறேன்'' என்று சொல்லி பலநீதிக்கதைகளை அத்தலைவனுக்கும் காட்டுவாசிகளுக்கும் தினமும் கூறலானான். அவர்கள் அவற்றால் மனிதப்பண்பாடு, நல்ல குணங்களால் ஏற்படும் நன்மை, மற்றும் பல புதிய விஷயங்களைத் தெரிந்து கொண்டார்கள்.

சலீமும் தனக்குத் தெரிந்த நல்ல கதைகளையும் உபதேசங்களையும் கூறவே அவர்கள் ''நாங்கள் உங்கள் இருவரிடமிருந்து பல புதிய விஷயங்களைத் தெரிந்து கொண்டோம்'' என்றார்கள்.

அக்கதைகளைக் கேட்க வந்த இரு இளம் பெண்கள் பசுபதியையும் சலீமையும் விரும்பினார்கள். அவர்கள் தனித்தனியே அந்த இரு நண்பர்களையும் சந்தித்து அவர்களை மணக்க விரும்புவதாயும் காட்டிலிருந்து ஓடி வெகு தூரம் போய்விடலாம் என்றும் கூறினார்கள். அவர்களோ அவ்வாறு செய்வது சரியல்ல எனக்கூறி அவ்விஷயத்தைத் தலைவனிடமும் தெரிவித்து விட்டார்கள்.

அத்தலைவன் அந்த இருபெண்களையும் கடிந்து கொண்டு பசுபதியையும் சலீமையும் அவர்களது நேர்மைக்காகப் பாராட்டினான். அவன் அவர்களிடம் ''நீங்கள் எவ்வளவோ நல்ல விஷயங்களை எங்களுக்கு போதித்தீர்கள். ''நரபலி கொடுக்காவிட்டால் தேவதை ஒரு கெடுதலும் செய்யாது என்று

நிரூபித்து விட்டால் அந்தப் பழக்கத்தையே நாங்கள் விட்டு விடுகிறோம்'' என்றான்.

பசுபதியும் சலீமும் நன்கு யோசித்து ஒரு திட்டம் திட்டினார்கள். மறுநாள் அவர்கள் காட்டுவாசிகளின் தலைவனிடம் பசுபதி ''பௌர்ணமியன்று நீ என்னை பலியிடு. அதற்கு என் நண்பன் மந்திரம் ஓதி அபூர்வ சக்தியை ஏற்றிய கத்தியை உன்னிடம் கொடுப்பான். நீ அதைக் கொண்டு என்னை வெட்டு. தேவதைக்கு நரபலி இஷ்டம் என்றால் நான் உடனேயே வெட்டுண்டு இறந்து போவேன். தேவதைக்கு பலி இஷ்டம் இல்லை என்றால் அந்தக் கத்தி பின்னுக்கு நகரும் முன்னே வந்து என்னைத் தாக்கவும் தாக்காது'' என்றான். அத்தலைவனும் அவ்வாறே செய்து பார்க்கலாம் என்று கூறினான்.

சலீம் அத்தலைவனிடம் ஒரு இரும்புக் கத்தியைக் கேட்டு வாங்கிக் கொண்டான். அதில் அவன் தன்னிடமிருந்த காந்தக்கல்லால் தேய்த்து அதில் மிகுந்த காந்த சக்தியை ஏற்றினான். அதுபோல ஒரு இரும்பு சங்கிலியிலும் நிறைய காந்த சக்தியை ஏற்றி அதனை பசுபதி கழுத்தில் அணியச் செய்தான். சலீம் கத்தியை பசுபதியின் கழுத்தருகே கொண்டு போனபோது கத்தி பின் நோக்கிச் செல்வது



கண்டு திருப்தி அடைந்தான்.

பௌர்ணமி வந்தது. பசுபதி பலிக்குத் தயாரானான். அதன் பிறகு அந்த நண்பர்கள் போட்ட திட்டப்படி எல்லாம் நடந்தது. தலைவன் கத்தியை எடுத்து பசுபதியின் கழுத்தருகே கொண்டு போனபோதெல்லாம் அது அவன் கழுத்தைத் தொடாமல் சட்டென் விலகி விலகிப் போயிற்று. மூன்று முறை தலைவன் முயன்றும் கத்தி விலகிச் சென்றது கண்டு அவன் ஆச்சரியப்பட்டான்.

அவன் அக்கத்தியை தூரவைத்துவிட்டு பசுபதியை பலிபீடத்திலிருந்து எழுப்பி அந்த இரு நண்பர்களின் கால்களில் விழுந்து ''நீங்



கள் உண்மையிலேயே மகான்கள். தேவதையின் அபிப்பிராயம் என்ன என்று எங்களுக்கு உணர்த்தினீர்கள். ஆனால் நாங்கள் இந்தக் காட்டை விட்டு நகரங்களில் போய் மற்ற மனிதர்களைப் போல வாழ வேண்டும் என்றால் அதற்குப் பணம் எங்களிடம் இல்லையே. இதற்கும் நீங்கள் உதவ வேண்டும். இங்கிருந்து கொஞ்ச தூரத்தில் ஒரு மலைக்குகை இருக்கிறது. அதில் ஒரு ராட்சஸன் வசித்து வருகிறானாம். அவனை நாங்கள் பார்த்ததே கிடையாது. ஆனால் அந்த குகைக்குள் சென்றவர்கள் யாரும் திரும்பி வரவே இல்லை. அந்த ராட்சஸனிடம் எக்கச்சக்கமாகப் பணம் இருக்கிறதாம். அதைக் கொண்டு வந்து எங்களுக்குக் கொடுக்க வேண்டும்'' என்றான்.

பசுபதியும் சலீமும் அதனைச் செய்து முடிப்பதாகக் கூறினார்கள். அவர்கள் இருவருமாகவே அந்த குகையை நோக்கிச் சென்றார்கள். காட்சிவாசிகளின் தலைவன் தான் அவர்கள் அந்த குகவாசல் வரை கொண்டு போய் விட்டான்.

குகைக்குள் அந்த இரு நண்பர்களும் எட்டிப் பார்த்தனர். உள்ளே ஒரே இருட்டாக இருந்தது. ஆனாலும் அவர்கள் தைரியமாக உள்ளே போனார்கள். கொஞ்சதூரம் தட்டுத் தடுமாறிப் போனபின் வெளிச்சம் வந்தது. மறுநிமிடம் அங்கு அழகிய பெண்ஒருத்தி தோன்றினாள்.

அவள் பசுபதியிடம் ''உன் போன்ற அழகனை நான் பார்த்ததே இல்லை. என்னைப் பார்த்தவன் என்னைக் கல்யாணம் செய்து கொண்டாலே உயிர்தப்ப முடியும். எனவே நாம் இப்போதே திருமணம் செய்து கொண்டு விடலாம்'' என்றாள்.

அப்போது பசுபதி ''இதோ என் நண்பன் இருக்கிறானே. இவனுக்கு என்ன வழி?'' என்று கேட்டான். அதைக்கேட்டு அந்தப் பெண் 'களுக்'கென்று சிரித்தாள். மறுநிமிடம் அவள் சலீமைப் பார்க்க அவன் பசுபதியின் கண் முன்னாலேயே எரிந்து சாம்பலாகி

விட்டான். பசுபதி அந்தச் சாம்பல் குவியலின் அருகே உட்கார்ந்து "நான் உன்னை மணந்து கொள்ள மாட்டேன். என்னையும் இது போலச் சாம்பலாக்கி விடு" என்றான்.

அந்தப் பெண் அதைக்கேட்டு "சபாஷ்! உனக்கு ஆசைகாட்டி இணைபிரியா நண்பர்களான உங்கள் இருவரையும் பிரிக்கப் பார்த்தேன். அது என்னால் முடியவில்லை. உங்கள் நட்பு மிகவும் உயர்ந்தது. இன்னும் சற்று நேரத்தில் சலீம் உயிர் பெற்று எழுந்து வருவான். இனிமேல் இந்த குகைக்குள் தொடர்ந்து செல்லுங்கள். உங்களுக்கு நன்மையே உண்டாகும்" என்று கூறி மாயமாய் மறைந்து போனாள்.

சற்று நேரத்தில் சாம்பலாகிக் கிடந்த சலீம் உயிர்பெற்று எழுந்து வந்தான். பசுபதி அவனிடம் நடந்ததை எல்லாம் சொன்னான்.

அவர்கள் மேலும் கொஞ்ச தூரம் சென்றனர். அப்போது அவர்களின் முன் ஒரு உயரமான மனிதன் வந்து நின்றான். அவன் தன் கீச்சுக் குரலில் "எனக்கு எவன் நல்ல பாட்டாகப் பாடிக் காட்டுகிறானோ அவனுக்கு என்னிடமுள்ள நிதியை அளிப்பேன். நன்கு பாடாதவனை அப்படியே விழுங்கி விடுவேன்" என்றான்.

இரு நண்பர்களும் மிக நன்றாகப் பாடினார்கள். அது கேட்டு அந்த நெட்டை மனிதன் மகிழ்ந்து பாட்டிற்கு ஏற்ப நடனமாடினான். பாடி முடித்ததும் பசுபதி களைத்துப் போய் விழுந்துவிட்டான். அது கண்டு சலீம் கண்ணீர் உகுத்து "ஐயோ! என் நண்பன் இல்லாமல் என்னால் உயிருடன் இருக்க முடியாது" என்று கதறினான்.



நெட்டை மனிதன் பதில் எதுவும் கூறாமல் அவனது தோளைப் பற்றி ஒரு பெரிய மாளிகைக்குள் அழைத்துச் சென்றான். அதில் எங்கு பார்த்தாலும் நவரத்தினக் குவியல்களும் தங்ககட்டிகளுமாக இருந்தன. அதைக்கண்ட சலீமின் கண்கள் அகலவிரிந்தன.



அவன் சலீமிடம் "இவை எல்லாம் உனக்குத்தான். ஆனால் நீ மட்டும் உன் நண்பன் உயிரோடு வரவேண்டும் எனக் கேட்டால் இவை எல்லாம் மறைந்து விடும். யோசித்துச் சொல். உனக்கு இந்தச் செல்வம் வேண்டுமா அல்லது உன் நண்பன் வேண்டுமா?" என்று கேட்டான். சலீம் சற்றும் தயங்காமல் "எனக்கு என் நண்பன்தான் வேண்டும்" என்று கூறினான்.

அவ்வளவுதான் மறுநிமிடம் அந்த செல்வம், மாளிகை, நெட்டை மனிதன் எல்லாமே மாயமாய் மறைந்துவிட்டன. சலீமின் பக்கத்தில் பசுபதி நின்று கொண்டிருந்தான். சலீம் நடந்ததை எல்லாம் பசுபதியிடம் கூறினான்.

இன்னும் என்னென்ன அற்புதங்கள் நிகழப் போகின்றனவோ என்று எண்ணிய வாறே அவர்கள் தொடர்ந்து நடந்தார்கள். கொஞ்ச தூரம் போனதும் மலைபோன்ற ஒரு ராட்சஸனை அவர்கள் கண்டார்கள்.

அவன் அவர்களைப் பார்த்து "உங்கள் நட்பு மேலானது. உங்களில் ஒருவன் பெண்ணைக் கண்டு மயங்கிவிடவில்லை. மற்றவன் பணத்தைக் கண்டு மனம் மாறிவிடவில்லை. எவ்வளவு யோசித்தும் உங்களில் யார் உயர்ந்தவன் என்று என்னால் தீர்மானிக்க முடியவில்லை. நீங்களே நன்கு யோசித்து தக்க காரணங்களுடன் உங்களில் யார் உயர்ந்தவன் என்று கூறுங்கள்" என்றான்.

அவர்கள் ராட்சஸனிடம் "இந்த உலகில் எல்லோரும் சமமே. உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்று கிடையாது. உயர்ந்தவர் என்று யாரையாவது குறிப்பிட வேண்டுமானால் அவர் கடவுள் ஒருவரே. அந்தக் கடவுளின் விருப்பம் இதுதான். இந்தக் குகையிலுள்ள பெண்ணைக் காட்டுவாசிகளின் தலைவனுக்கு விவாகம் செய்து வைத்து இந்த செல்வத்தை எல்லாம் அவனுக்குக் கொடுத்துவிடு. இதன்பிறகு நாங்கள் எங்கள் வழியே சென்று பட்டணத்தை

அடைகிறோம்'' என்றார்கள்.

மறுநிமிடம் பளிச்சென ஒரு மின்னல் வெட்டியது. நண்பர்கள் இருவரும் தம் கண்களை மூடிக் கொண்டார்கள். அவர்கள் தம் கண்களைத் திறந்த போது பட்டணத்தின் எல்லையில் தாம் இருப்பதைக் கண்டார்கள்.

காட்டுவாசிகள் நன்மை அடைந்திருப்பார்கள் என எண்ணி அவர்கள் இனி தம்மை எந்த சக்தியாலும் தம்மைப் பிரிக்க முடியாது என எண்ணினார்கள். இப்படி அருள் புரிந்த கடவுளை வழிபட எண்ணி அவர்கள் பட்டணத்திற்குள் சென்றார்கள். கொஞ்ச தூரம் போனதும் அவர்கள் ஒரு கோவிலையும் ஒரு மசூதியையும் கண்டனர்.

அப்போது இருவர் மனதிலும் "ஆகா! கடவுளை வழிபடத் தக்க இடம் கிடைத்துவிட்டது'' என எண்ணினார்கள். பசுபதி கோவிலை நோக்கி நடந்தான். சலீம் மசூதியை நோக்கிச் சென்றான். அப்போது இருவரும் ஒரே சமயம் "இதுவரை ஒன்றாக இருந்த நாம் பிரிந்தா போகப் போகிறோம்?'' என்றார்கள்.

அப்போது கடவுள் "ஆகா! இவர்கள் எவ்வளவு நல்லவர்கள். சுயநலமே இல்லாதவர்கள். இவர்களது நட்பு பல கடும் சோதனைகளுக்குள்ளாகிக் கலையாமல் இருந்தது. ஆனால் என்னை வழிபடுவதாகக் கூறிக் கொண்டு பிரிந்து செல்கிறார்களே. இது என்ன அறிவீனம். இணைபிரியா நண்பர்கள் இப்படிப் பிரிந்து போவது கண்டு நான் இவர்களுக்குப் பரிதாபப்படுகிறேன். என் பெயரைச் சொல்லிக் கொண்டா இவர்கள் பிரிய வேண்டும்?'' என்று வருத்தப் பட்டார்.





# உண்மைப் பேச்சு

ஒரு ஊரில் ஒரு வட்டிக் கடைக் காரன் இருந்தான். அவன் எந்தப் பாவத்திற்கும் அஞ்சாதவன். அதனால் அவனுக்குத் தேவதை தரிசனம் கிடைக்காது போனாலும் பிசாசுகள் மட்டும் அவன்முன் உலாவி வந்தன. நல்லவர்கள் பிசாசைக் கண்டு பயப்படுவார்கள். ஆனால் பாவிகள் பயப் படுவதில்லையே.

அந்த வட்டிக் கடைக்காரன் ஒரு ஏழைப் பெண்ணிற்குக் கடன் கொடுத்திருந்தான். அவளுக்கு ஆறு குழந்தைகள். திடீரென அவள் கணவன் இறந்து போனதால் அக் குழந்தைகளுக்குக் கால்வயிற்றுக் கஞ்சி கூட அவளால் ஊற்ற முடியவில்லை. அப்போதுதான் வட்டிக் கடைக்காரனிடம் முப்பது ரூபாய் கடன் வாங்கினாள். அது இரண்டு வருடங்களில் வட்டிக்கு வட்டி என்று கூடி நூறு ரூபாய் ஆகிவிட்டது. அந்தக் கடன் அவளது சிறு வீட்டின் பேரில்தான் வாங்கப்பட்டிருந்தது.

அந்த வீட்டின் மதிப்பு நூறு ரூபாய்க்கும் மேலாகும். ஆனால் வட்டிக் கடைக்காரன் அதனைத் தனதாக்கிக் கொள்ள எண்ணினான். ஒருநாள் காலை அவன் அந்தப் பெண்ணின் வீட்டை நோக்கிச் சென்றான். அவன் தெருவில் அடி எடுத்து வைத்ததுமே ஒரு பிசாசு அவன் முன் தோன்றியது.

வட்டிக் கடைக்காரன் அதனிடம் "எங்கே இப்படிக் கிளம்பினாய்? யாரையாவது புதிதாகப் பிடித்துக் கொண்டு ஆட்டப் போகிறாயா?" என்று கேட்டான். பிசாசும் சிரித்துக் கொண்டே "நான் இந்த ஊருக்கு வந்து வெகு நாட்களாகிவிட்டது. ஏதாவது உணவு

—குரு. ரம்யா—

கிடக்குமா என்றுதான் வந்தேன். நீ எங்கே போகிறாய்'' என்று கேட்டது.

அவனும் "என்னிடம் ஒரு பெண் தன் வீட்டின் பேரில் முப்பது ரூபாய் இரண்டு வருடங்களுக்கு முன் கடன் வாங்கினாள். அது வட்டியோடு சேர்ந்து இப்போது நூறு ரூபாய் ஆகிவிட்டது. அவள் கடனைக் கொடுக்காததால் அவளது வீட்டை எனதாக்கிக் கொள்ளப் போகிறேன்'' என்றான்.

பிசாசும் "அடேயப்பா! இரண்டே வருஷத்தில் வட்டி மட்டும் அசலை விட இரண்டு பங்கிற்கும் மேலா? அடேயப்பா! நீங்கள் எங்களை எல்லாம் மிஞ்சி விட்டீர்கள்'' என்றது. வட்டிக் கடைக்காரன் இதைக் கேட்டு கோபப்படவில்லை. ஆனால் மனதிற்குள் தான் பிசாசையே மிஞ்சி விட்டதாக எண்ணிக் கர்வப்பட்டுக் கொண்டான். பிறரிடமிருந்து பணம் கறப்பதில்தான் மன்னன் என நினைத்து அவன் மகிழ்ந்து போனான்.

அவர்கள் இருவரும் பேசிக் கொண்டே வழி நடந்தபோது ஒரு குடிசையிலிருந்து ஒரு பெண்குரல் கேட்டது. "உன்னைப் பிசாசு பிடித்து விழுங்கட்டும். எவ்வளவு தடவை சொன்னேன் கதவை மூடித் தாழ்ப்பாள் போட்டுக்கொள் என்று. உன் மரமண்டையில் கொஞ்சம் கூட ஏறவில்லையே. திருட்டுப் பூனை வந்து இருந்த பாலை



எல்லாம் குடித்துவிட்டுப் போய் விட்டது. இப்போது என்ன செய்வேன்?''

அப்போது வட்டிக் கடைக் காரன் பிசாசிடம் "கேட்டாயா அந் தப் பெண் சொன்னதை? அவள் தன் மகளை உனக்கு ஆகாரமாகக் கொடுக்கிறாளாம். போய் சாப் பிடு'' என்றான். பிசாசு சிரித்துக் கொண்டே "அவள் உண்மையில் அப்படிச் செய்ய விரும்பவில்லை. ஒரு பேச்சுக்கு அப்படிக் கூறி இருக் கிறாள். அவ்வளவுதான்'' என்றது.

இன்னும் கொஞ்சம் தூரம் போன தும் அவர்கள் ஒரு கணவனும் மனைவியும் சண்டை போட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தார் கள். அவர்கள் இருவருமே "உன் னைப் பிசாசு விழுங்கட்டும்'' எனத் திட்டிக் கொள்ளவே வட்டிக் கடைக்காரன் பிசாசிடம் "பார்த் தாயா! உனக்கு இரண்டு பேர்கள் ஆகாரமாகக் கிடைக்கிறார்கள்'' என்றான்.

பிசாசும் "இதுவும் அவர்கள் ஒரு பேச்சுக்காகத்தான் கூறினார் கள்'' என்றது. அவர்கள் மேலும் கொஞ்சதூரம் போனதும் வட்டிக் கடைக்காரன் கடன் கொடுத்தி ருந்த பெண்ணின் வீடு வந்தது. வட் டிக் கடைக்காரன் அவனிடம் "நீ இப்போதே வட்டியும் அசலு மாகச் சேர்ந்த நூறு ரூபாய் கடன் பாக்கியைக் கீழே வை. இல்லா விட்டால் உன் தட்டுமுட்டு சாமான் களை எல்லாம் தூக்கி வெளியே எறிந்துவிட்டு இந்த வீட்டை என் னுடையதாக்கிக் கொள்வேன்'' என்றான்.

அப்போது அந்தப் பெண் "இதென்ன அநியாயம்! உன்னைப் பிசாசுதான் விழுங்க வேண்டும்'' என்றாள். அப்போது பிசாசு "இவள் தான் முழு மனதுடன் இப்படிச் சொன்னாள். அதனால் நீ தான் என் ஆகாரம்'' என்று கூறி வட்டிக் கடைக்காரனைப் பிடித்து விழுங்கி விட்டு மாயமாய் மறைந்தது.



# இயற்கை விநோதங்கள்




## ராட்சஸப் பல்லிகளின் இனம்

ராட்சஸப் பல்லிகளெனப்படும் 'டினோஜார்' என்பவை பார்க்க முதலைகள் போல இருக்கும். முதலைகள் மடுக்களிலும் நதிகளிலும் பெரிய குளங்களிலும் இருக்கும். இவை இருவகைப்படும். 'கரோக்கடைல் டீ', 'காவியாலிடீ' என்பன அவை. இவை உருவில் அநேகமாக ஒன்றாகத் தென்பட்டாலும் முகம் மட்டும் சற்று வேறுபட்டிருக்கும். முதலாவதற்கு வாய் சற்று அகண்டு இருக்கும். இரண்டாவது வகைக்கு நீண்ட கூரான மூக்கு இருக்கும். பற்கள் வெளியே தெரியாது. எனவே முதலைகள் ராட்சஸப் பல்லி இனமே.

## உறுமும் புலிகள்!

கோபம் கொண்ட புலிகளின் காதுகள் நெட்டுக்குத்தாய் நிற்கும். காதுகளில் வட்ட வளையங்கள் இருக்கும். இந்தப் புலிகள் சட்டென எதிரிகள் மீது பாயும். ஆனால் காதுகளை உயர்த்தாமல் சாதாரணமாக இருக்கும் போது புலிகள் அவ்வளவு கோபமாக இல்லை என்று தெரிந்து கொள்ளலாம். அந்த நிலையில் யாராவது அதன் முன் சென்றால் அது உறுமித் தன் கோரைப் பற்களைக் காட்டும். அதற்குப் பிறகு மெதுவாக நகரும். குரைக்கிற நாய் கடிக்காது என்பது போல உறுமும் புலிகள் சட்டென எதிரிலுள்ள தன்மீது பாய்ந்து விடாது.





## மிகப் பழையது!

சாதாரணமாக ஒரு மாமரம் ஐம்பது ஆண்டுகளே இருக்கும். ஆனால் 1912ல் கோவை வேளாண்கல்லூரியைக் கட்ட வாங்கப்பட்ட நிலத்தில் அப்போது ஐம்பது ஆண்டுகளான ஒரு மாமரம் இருந்தது. அது இன்றும் பசுமையாக இருப்பதோடு ஆண்டிற்கு இரண்டாயிரம் காய்களைக் கொடுக்கிறது. அதன் ஒவ்வொரு மாங்காயும் 250 கிராம் நிறையுள்ளது. இந்த மாமரம் 140 ஆண்டுகளாக இருப்பதாகக் கருதுகிறார்கள். மிகப் பழைய மரமாகக் கருதப்படும் இதன் அடிமரச் சுற்றளவு 14 அடி. உயரம் 40 அடி. இதன் கிளைகள் ஒடிந்து விழாமல் இருக்கத் தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

n and all the rest
are the very best
YOU from today
mama's 3rd B'day



Thanks to all of you. From all of us here at Chandamamma. Thanks for having shared all those happy times with us. And we hope you have many more.

Thanks to all you Moms, Dads, Grandmoms and Grandads too. For giving us homes with such great friends. And all that warmth and affection.

Thanks to all our distributors and dealers. For all the help and support. Here's to even better times ahead !

This is just the beginning. Watch out for the surprises we have in store for you next year. Like the new range of Chandamama Soft Toys. And much more ! Because, at Chandamama, the party goes on all year through !




CHANDAMAMA
COLLECTION

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1993 ஜூலை மாத இதழில் வெளியிடப்படும்**



M. Natarajan



Devidas Kasbekar

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ மே 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்பு களுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்பு களை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## மார்ச் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **அன்புக்கு என்றும் அடிமை உண்டு**

இரண்டாவது போட்டோ: **ஆசிக்கு என்றும் உயர்வு உண்டு**

பரிசு பெற்றவர்: **எஸ். ஏ. தேவி, கோவை - 2**




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா




அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள்
அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம்,
மராட்டி, ஒரியா, ஸமஸ்கிருதம், தமிழ் அல்லது தெலுங்கு

தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும்
உணரச் செய்யும்

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 105.00 விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள
நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 111.00 விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

பணத்தை தங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சந்தமாமா பப்ளிகேஷன்ஸ்
என எழுதி
சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ்,
வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்

